*Kumaran̲*

*Āram 18, muttu 32*

*March 27, 1941*

Record no. 313

REGD. NO. M. 1823. 12 பக்கங்கள். KUMARAN WEEKLY

சந்தா விவரம்

உள்நாடு வருஷம்
ஒன்றுக்கு ரூ. 5-0-0
ஆறு மாதம் 3-0-0
சிலோன் ரூ. 6-0-0
பர்மா, மலாய்
முதலிய
வெளிநாடு
ஆ 1-க்கு ரூ. 7-0-0

# குமரன்

விளம்பரம்.

நோட்டீஸ், கோர்ட்
விளம்பரம் முதலிய
வைகளுக்கு இஞ்ச்
ஒன்றுக்கு ரூ. 2-0-0
வியாபார சம்பந்த
மானது ரூ. 0-12-0
ஒப்பந்த விளம்பரத்
துக்கு மானேஜருக்
கெழுதவும்.

வியாழன்தோறும் வெளிவரும் — மாதப் பதிப்பும் சேர்ந்தது — PUBLISHED EVERY THURSDAY.

ஆரம் 18. | காரைக்குடி, விக்கிரம-ஆ பங்குனி-மீ 14-உ (27—3—41) | முத்து 32

இன்னும் இரண்டு வாரங்களில் நாம் தேசிய வார விழாவைக் கொண்டாட வேண்டும். அதைக் கொண்டாடுவதில் இரண்டு வித நோக்கங்கள் அடங்கியிருக்கின்றன. ஏப்ரல் 6-ந்தேதியன்றும், 13-ந் தேதியன்றும் உபவாசமிருந்து ஒவ்வொருவரும் தம்மைத் தாமே தூய்மைப் படுத்திக்கொள்ளுதல் ஒன்று. நிர்மாணத் திட்டத்தில் விசேஷ கவனம் செலுத்துவதன் மூலம் பாமர மக்களிடையே விழிப்பை உண்டுபண்ணுதல் மற்றொன்று.

## 1919-ல்

1919-ம் வருடம் ஏப்ரல் மாதம் 6-ந் தேதியன்று, யாரும் எதிர்பாராத வகையில் திடீரென்று, நாடெங்கும் சுதேசி வெள்ளம் ஏற்பட்டுக் கரைபுரண்டு ஓடியது; அப்பொழுது ஏற்பட்ட வகுப்பு ஒற்றுமைக்கும் அளவில்லை. காங்கிரசிலுள்ள ஹிந்துக்கள், ஹிந்து மதத்தைப் பிடித்திருக்கும் தீண்டாமை மாசைப் போக்கிவிடக் கங்கணம் பூண்டனர். சுதேசி ஆர்வம் முழுவதும் கதர்மீது சென்றது. ஏனெனில், எங்கும் வியாபித்துள்ள முக்கியமான கிராமக் கைத்தொழில் அது தான்.

## அதற்குப் பின்

1919ம் வருஷத்துக்குப் பிறகு 20 வருஷங்களில் நிர்மாணத் திட்டம் விரிவடைந்திருக்கிறது. அகில இந்திய கிராமக் கைத்தொழில் சங்கத்தின் மூலமாக, இன்னும் எத்தனையோ கிராமத் தொழில்கள் ஏற்பட்டிருக்கின்றன. ஹிந்துஸ்தானி தலிமி சங்கத்தின் மூலமாகக் கிராம மக்கள் எழுத்தறிவும் பெற்றிருக்கின்றனர். தேச சேவையில் ஸ்திரீகள் பங்கெடுத்துக் கொள்வதும் அதிகரித்திருக்கிறது; அவர்கள் ஆண்களுடன் சரிநிகர் சமானமாகச் சேவை புரிந்து வருகின்றனர்.

## அஹிம்சையின் சக்தி

அஹிம்சா தர்மத்தின் உண்மை சக்தி வெளிப்படுவதற்கு, நிர்மாணத் திட்டத்தை விஸ்தரித்து, வேலை செய்வது ஒன்று தான் வழியாகும். ஆரம்பத்தில் சாத்வீகச் சட்டமறுப்புக்கு இடமேயில்லை. நிர்மாணத் திட்டத்தைப் பூர்த்தி செய்ததற்குப் பிறகு தான் அதற்கு இடமேற்படுகிறது. நிர்மாணத் திட்டத்தின் மூலமாக நம்மைத் தயார்ப்படுத்திக்கொள்ளாமல் 1919ம் வருஷத்தில் சட்டமறுப்பில் இறங்கியதன் பயனாக நாம் பின்வாங்க நேரிட்டது. இதை நாம் அனுபவத்தில் கண்டோம்.

## வெற்றியின் அளவு கோல்

தாமாகவே கீழ்ப்படிந்து நடக்க சட்ட மறுப்பாளர்கள் கற்றுக் கொண்டாலன்றி, சட்டமறுப்பு ஒரு நாளும் சாத்வீகமாயிராது. ஒத்துழைப்பு, அடக்கம், கட்டுப்பாடு, விதிகளுக்குப் பூரணமாகக் கீழ்ப்படிந்து நடத்தல், இவை இருந்தாலன்றிப் பிரயோசன மில்லை. சிற்சில சந்தர்ப்பங்களில் சிலர் தான் சட்டமறுப்பில் இறங்க வேண்டும். ஆனல் அஹிம்சா ஸ்தாபனத்தைச் சேர்ந்தவர்கள் அனைவரும் நிர்மாணத் திட்டத்தை நிறைவேற்றியே தீரவேண்டும். பாமர மக்களிடையே நிர்மாணத் திட்டம் வேரூன்றினல் தான் சட்டமறுப்புக்குப் பலனுண்டு. ஆகவே, நிர்மாணத் திட்டம் எவ்வளவு தூரத்துக்கு வெற்றி பெற்றிருக்கிறதோ அதைக் கொண்டு தான் சட்டமறுப்பின் வெற்றியை அளவிட முடியும்.

# தேசிய வாரக் கொண்டாட்டம்

## காங்கிரஸ் ஊழியர்களுக்கு காந்திஜி வேண்டுகோள்

### நிர்மாணத் திட்டத்தின் வெற்றியே அஹிம்சைப் போரின் வெற்றி

[ஏப்ரல் 6-உ முதல் 13-உ வரையில் நாடெங்கும் தேசீய வார விழா கொண்டாடப்படும். இது சம்பந்தமாக மகாத்மா காந்தி வெளியிட்டிருக்கும் அறிக்கையில் அடியில் வருமாறு குறிப்பிட்டிருக்கிறார்:]

★

## ஊழியர்களுக்கு

ஆகவே, தேசிய வாரத்தில் காங்கிரஸ் ஊழியர்கள் அனைவரும் நிர்மாணத் திட்டத்தில் முழுநாட்டமும் செலுத்துவரென நம்புகிறேன். நிர்மாணத் திட்டத்தில் முக்கியமானவை கதரும், இதர கிராமத் தொழில்களும். இவ்வேலைகளில் புவர்களும், விருத்தாப்பியரும், ஸ்திரீகளும் ஈடுபடலாம். வேலையின் அளவையும் எளிதில் மதிப்பிட்டு விடலாம். எப்பொழுதைக் காட்டிலும் இப்பொழுது அதிக ஊக்கம் காட்டப்படுமென நம்புவோம்.

★

ராமவிலாசம் சினிமாப் பாலஸில் 4-வது வாரம் நடைபெறும் பக்த கௌரியில் ஒரு காக்ஷி

★



## ஆண்ட்ருசுக்கு ஞாபகச் சின்னம்

தீனபந்து ஸி. எப், ஆண்ட்ருசுக்கு ஞாபகச் சின்னம் அமைப்பது சம்பந்தமாக மகாத்மா காந்தி வெளியிட்டிருக்கும் அறிக்கையில், மனித சமூகம் உய்வதற்காகவே அல்லும் பகலும் உழைத்த ஸி.எப். ஆண்ட்ருசுக்கு ஞாபகச் சின்னம் அமைக்க ஏப்ரல் 5-ந்தேதிக்குள் 5 லட்சம் ரூபா தேவை யென்று குறிப்பிட்டிருக்கிறார். "அவர் தமது வீடுபோல் எண்ணியிருந்த சாந்திநிகேதனம் பணமில்லாமல் கஷ்டப்படுவதற்குநாம் இடந்தராமலிருப்பதுதான் ஆண்ட்ருசுக்கான வாஸ்தவமான ஞாபகச் சின்னமாகும்" என்றும் குறிப்பிட்டிருக்கிறார். கவி தாகூர் தமது கவிகளாலும், சாந்திநிகேதனத்தாலும் இந்தியாவுக்கு அளித்துவரும் பெருமையையும் மகாத்மா தமது அறிக்கையில் பாராட்டிக் குறிப்பிட்டிருக்கின்றார்.

## 'ஹரிஜன்' மீண்டும் வெளிவரும்

'ஹரிஜன்' பத்திரிகையை மீண்டும் வெளியிடுவதற்கான ஏற்பாடுகளை ஸ்ரீ மகாதேவ தேசாய் செய்துவருகிறார். முதல் இதழ் அநேகமாக மார்ச் 30-ந்தேதி வெளிவரலாம்.



சுமார் 15 லட்சம் ரூபாய் பெறுமான பலவகையான யுத்த தளவாடங்களுக்குத் தென்னிந்தியாவில் ஆர்டர் கொடுக்கப்பட்டிருப்பதாகத் தெரிகிறது.

## சென்னை ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 4 முதல் இரவு 10-30 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### மார்ச் 27உ வியாழன்

| | |
|---|---|
| 1·35—2·00<br>4·00—4·30 | ஸ்ரீமதி விஜயலட்சுமி ஜகன்னாதன் பாட்டு |
| 2·00—2·30 | கோடா ராமகிருஷ்ணய்யா வயலின் |
| 2·30—2·45 | காரைக்கா லம்மையார்— ஸ்ரீமதி வி. ஜே. மரகதவல்லி பேச்சு |
| 6·05—6·30<br>9·30—10·00 | ஸ்ரீமதி வி. எஸ். ராஜம் பாட்டு |
| 6·30—7·00 | கல்லில் கண்ட முகம்—நாடகம் |
| 7·50—9·15 | திருச்சியில் உள்ளபடி |

★

### 28உ வெள்ளி

| | |
|---|---|
| 1·35—2·00<br>4·00—4·30 | ஈமனி அச்சுதராம சாஸ்திரி வீணை |
| 5·00—5·45 | 'பொப்பிலிகதா' |
| 6·05—6·30 | ஜங்கம் பாட்டுகள் |

★

### 29உ சனி

| | |
|---|---|
| 1·35—2·00<br>6·05—6·30 | குமாரி ரத்னம் பாட்டு |
| 5·00—5·45<br>6·30—7·00 | ஸ்ரீதர் பாட்டு |
| 7·50—9·00 | மகாராஜபுரம் விசுவநாத ஐயர் ஷை |

★

### 30உ ஞாயிறு

| | |
|---|---|
| 1·35—2·00<br>4·00—4·30 | எஸ். ஆர். ராமாமிருதம் பாட்டு |
| 2·00—2·30<br>5·00—5·45 | ஆர். கே. வெங்கடராம சாஸ்திரி வயலின் |
| 6·30—7·00<br>8·30—9·00 | ஸ்ரீகண்டன் பாட்டு |
| 7·50—8·30<br>9·30-10·00 | ஸ்ரீமதி சார நாயகி அம்மாள் ஷை. |

★

### 31உ திங்கள்

| | |
|---|---|
| 1·35—2·00<br>4·00—4·30 | ஸ்ரீமதி வி. எத்திராஜம்மாள் பாட்டு |
| 2·00—2·30 | மார்ல சூர்யநாராயணமூர்த்தி ஷை |
| 6·05—6·30 | எஸ். ஆர். வெங்கடேசன் ஷை |
| 6·30—7·00<br>9·45-10·30 | ஸ்ரீமதி சரோஜா ரமணி ஷை |
| 7·50—9·00 | திருச்சியில் உள்ளபடி. |

★

### ஏப்ரல் 1உ செவ்வாய்

| | |
|---|---|
| 1·35—2·00 | வி. பலராமன் பாட்டு |
| 5·00—5·45<br>9·30—10·00 | ஸ்ரீமதி லக்ஷ்மி தேவம்மா ஷை |
| 6·30—7·00 | சிரோகி—நாடகம் |
| 7·50—9·00 | திருச்சியில் உள்ளபடி |

★

### 2உ புதன்

| | |
|---|---|
| 1·35—2·00 | ஸ்ரீமதி வி. கல்பகம் பாட்டு |
| 5·00—6·00 | ஆர். சுந்தரம் பிள்ளை நாதசுரம் |
| 6·30—7·00<br>8·30—9·00 | வி. துரைசாமி ஐயங்கார் வீணை |
| 7·00—7·10 | குறள்—பேச்சு |
| 7·50—8·30 | என். சோமசுந்தரம் பிள்ளை பாட்டு |

★

### 3உ வியாழன்

| | |
|---|---|
| 1·35—2·00 | அந்தகூரி யக்ஞ நாராயண சாஸ்திரி வயலின் |
| 5·00—6·00 | நாதமுனி கோஷ்டியார் |
| 6·05—6·30<br>9·30—10·00 | எம். என். ஹரிஹரன் பாட்டு |
| 7·50—9·15 | பெங்களூர் ஸ்ரீமதி நாகரத்னம்மாள் ஷை |

## மலாய்ச் செய்திகள்

### 2000 வெள்ளி நஷ்ட ஈடு

29-1-1939ல் ஏற்பட்ட ஒரு மோட்டார் விபத்தில் ஒரு சீனச் சிறுவன் மாண்டு போனதற்காக, 2000 வெள்ளி நஷ்ட ஈடு கொடுக்கும்படி பேரா உயர் நீதிமன்றத்தில் தீர்ப்பளிக்கப்பட்டது.

### உணவுக்குப் பஞ்சமில்லை

சிங்கப்பூர் கூடிய சீக்கிரம் தனக்கு (சர்க்காருக்கு) சொந்தமான முதலாவது அரிசித் தொழிற்சாலையைப் பெறும்.

இது முடிந்தவுடன் இது மலேயாவிலேயே சிகரற்று விளங்கும். இது ஒரு மணிக்கு 50 மூட்டை வெள்ளை அரிசியை உற்பத்தி செய்யும் சக்திவாய்ந்தது. நெல்லைச் சுத்தப்படுத்தும் யந்திரமோ ஒரு மணிக்கு 8 அல்லது 8½ டன் நெல்லைச் சுத்தப்படுத்தும் சக்தி வாய்ந்தது. இது வேலை செய்யத் தொடங்கி விட்டால் மலேயாவில் அரிசிக்குப் பஞ்சமிராது. மேலும் அரிசிக்கும், நெல்லுக்கும், பஞ்சமேற்படு மென்ற பயமிருக்கவும் தேவையில்லையாம்.

### வரி உயர்வு மசோதா

காலனி சட்ட சபையின் விசேஷக் கூட்டமொன்று மார்ச் 31-ந்தேதி நடைபெறும். இக்கூட்டத்தில் கொண்டுவரப் படும் மசோதாக்களிலொன்று யுத்த வரி (அதிக வரிகள்) மசோதாவாகும். உள்நாட்டு யுத்தச் செலவிற்கு வருமானந் தேட, பில் ஆப் எக்ஸ்சேஞ்ச் முதலியன, குதிரைப் பந்தயம், லாட்டரிப் பந்தயம் ஆகியவற்றின்மீதுள்ள வரிகளை உயர்த்துவதே மசோதாவின் நோக்கமாகும். செக் அல்லது பிராமிசரி நோட்டைத் தவிர எந்த விதமான ஒரு பில் ஆப் எக்ஸ்சேஞ்சிற்கும், ஒவ்வொரு 100 வெள்ளிக்கும், 100 வெள்ளிக்குக் குறைந்த ஒவ்வொரு தொகைக்கும் 10 காசு. செக்கிற்கு 8 காசு. மார்க்கட் பங்குகளைத் தவிர எந்த விதமான ஒரு சொத்தின் மாற்றம், விற்பனை முதலியவற்றிற்கு அதன் தொகையில் 1 சத விகிதம். குதிரைப் பந்தயங்களுக்கு இன்னுமொரு 2½ சத விகிதம்; லாட்டரி பந்தயங்களுக்கு இன்னுமொரு 5 சதவிகிதம்.

### தற்காப்பு ஏற்பாடுகள்

தேவையானால் தத்தம் வீடுகளை விட்டு வெளியேறத் தயாராகும்படி சிங்கப்பூரில், கடற்கரைப் பிரதேசங்களி லுள்ளவர்களுக்கு நோட்டீஸ்கள் வழங்கப்படுவதாகத் தெரிகிறது. ஆங்கிலப் பள்ளிக்கூடங்களும், இதர பள்ளிக்கூடங்களும் தற்காப்புப் படைப் பயிற்சியில் சேர்க்கப்பட்டு வருகின்றன. பல பள்ளிக்கூடங்களில், மாணவர்களைக் கொண்டு தீயணைக்கும் படைகள் நிறுவப்பட்டிருக்கின்றன.

---

பர்மா மந்திரி சபைமீது கொண்டுவரப்பட்ட நம்பிக்கையில்லாத் தீர்மானம் தோற்றுப்போயிற்று.





## திருச்சி ரேடியோ

ஒலி பரப்புகள் :— காலை 7-30 முதல் 9 வரை; பிற்பகல் 1-30 முதல் 3 வரை; மாலை 5 முதல் இரவு 10 வரை.

தமிழில் செய்திகள் :— காலை 7-45; பிற்பகல் 2-45; இரவு 7-35.

### 27உ வியாழன்

| | |
|---|---|
| 1·35—2·15 | பி. ஆர். ராமசந்த்ர ராவ் வயலின் |
| 5·15—6·00 | ஸ்ரீமதி தேவகுஞ்சரி பாட்டு |
| 7·50—9·20 | டி. ஆர். மகாலிங்கம் புல்லாங்குழல், டி. குருராஜப்பா வயலின், வாளாடி சுப்ரமணிய பிள்ளை மிருதங்கம். |

★

### 28உ வெள்ளி

| | |
|---|---|
| 1·35—2·00<br>6·05—6·30 | வி. வ. நாராயணன் பாட்டு |
| 5·15—6·00<br>7·50—8·30 | வி. வி. கோவிந்தசாமி பிள்ளை, எஸ். கதிர்வேலு பிள்ளை நாதசுரம் |
| 8·40—9·20 | ஸ்ரீமதி சுந்தர காமாக்ஷி பாட்டு |

★

### 29உ சனி

| | |
|---|---|
| 5·00—5·45<br>7·50—9·00 | சென்னையிலுள்ளபடி |
| 7·00—7·15 | குப்பையிலிருந்து செல்வம்—பி. என். அப்புசாமி பேச்சு |
| 7·15—7·30 | வீணை செய்யப்படும் முறை |
| 9·00—9·15 | அம்மா! —நாடகம் |

★

### 30உ ஞாயிறு

| | |
|---|---|
| 2·00—2·40 | ராவண சம்ஹாரம்—நாடகம் |
| 5·15—6·00<br>7·50—8·30 | ஸ்ரீமதி கே. சாவித்திரி அம்மாள் கோட்டு வாத்தியம், பாட்டு |
| 6·05—6·30<br>8·30—9·20 | கே. எஸ். ஹரிஹரய்யர் பாட்டு |

★

### 31உ திங்கள்

| | |
|---|---|
| 1·35—2·15 | எஸ். பாலகிருஷ்ணன் பாட்டு |
| 5·15—6·00 | சூர்யனார்கோவில் கே. நாராயணசாமி பிள்ளை நாதசுரம் |
| 7·50—9·20 | மைசூர் வாசுதேவாசார்யா பாட்டு, டி. குருராஜப்பா வயலின், உமையாள்புரம் கணேச ஐயர் மிருதங்கம் |

★

### ஏப்ரல் 1உ செவ்வாய்

| | |
|---|---|
| 5·15—6·00 | கும்பகோணம் பக்கிரிசாமிப் பிள்ளை நாதசுரம் |
| 7·50—9·20 | செம்மங்குடி சீனிவாச ஐயர் பாட்டு, கும்பகோணம் ராஜமாணிக்கம் பிள்ளை வயலின், தஞ்சை வைத்தியநாத ஐயர் மிருதங்கம் |

★

### 2உ புதன்

| | |
|---|---|
| 2·00—2·30<br>8·30—9·20 | கே. பாலகிருஷ்ண பிள்ளை பாட்டு |
| 5·15—6·00<br>7·50—8·30 | ஸ்ரீமதி திருபுராம்பாள் ஷை. |
| 6·05—6·30 | என். ராமமூர்த்தி ஐயர் வீணை |
| 7·00—7·15 | உணவு— கே. வி. ராமகிருஷ்ணன் பேச்சு |
| 7·15—7·30 | ராமுவும் சோமுவும். |

★

### 3உ வியாழன்

| | |
|---|---|
| 2·00—2·30 | டி. வி. சிவசிதம்பர ஐயர் புல்லாங்குழல் |
| 5·00—5·45<br>7·50—9·30 | சென்னையிலுள்ளபடி |
| 9·00—9·20 | சைத்தி—நாடகம் |



# சிங்களவர் இந்தியரை வெறுக்கலாமா?

## 'இருவரும் ஒரே தேசத்தவர்கள்'

### சரித்திர சம்பந்தமான ஆராய்ச்சி

சமீபகாலத்தில், இலங்கையில் இந்தியருக்கு விரோதமான துவேஷப் பிரசாரம் வளர்ந்து வருகிறது. இந்தியர் குடியேற்றத்தை தடுக்கவும், ஏற்கனவே அங்கு சென்று வேலைசெய்து பிழைக்கும் இந்தியர்களைத் துரத்தவும் பலவித நடவடிக்கைகள் எடுக்க முயற்சி செய்யப்பட்டு வருகிறது. சிங்கள மந்திரிகளே இந்தக் கைங்கரியத்தில் கச்சை கட்டிக் கொண்டு நிற்கின்றனர். ஆனால் இம்மாதிரி, இந்தியரிடம் துவேஷம் கொள்வது அத்தீவில் குடியேறியுள்ள இந்தியருக்கு மட்டும் விரோதமானது அன்று; இலங்கைத் தீவின் சரித்திரத்துக்கே விரோதமானது மாகும். இதை விளக்கி 'ஹிந்து'ப் பத்திரிகையில் ஒருவர் வரைந்துள்ள ருசிகரமான கட்டுரையின் சாரம் கீழே வருகிறது.—

"இந்தியர்களால் ஆபத்து" "சிங்களவர் தம் உயிருக்குப் போராடுகின்றனர்" என்ற கூக்குரல் தீவின் இதர பாகங்களில் ஒலித்துக் கொண்டிருந்த பொழுது, மேற்குக் கரை சிங்கள நகரங்களில் ஒன்றான கழுதாரையில் பிப்ரவரி 18உ ஒரு விசித்திர, ஆனால் மன எழுச்சி தரக்கூடிய ஒரு சம்பவம் நடந்தது. கண்டியின் கடைசி மன்னர் பிரிட்டிஷாரால் பிடிக்கப்பட்ட தினத்தின் 126வது ஞாபகார்த்த விழா. ஏராளமான சிங்களவர் இந்த வைபவத்துக்கு விஜயஞ் செய்திருந்தனர். சிங்கள சரித்திராசிரியர்களில் மிகப் பேராசிரியரான டாக்டர் பால் பீரிஸ் ஒரு பெரிய பிரசங்கம் செய்தார். அதில் கண்டி ராஜாவைப்பற்றிய கொடூரமான கட்டுக் கதைகள் எல்லாம் அண்டப் புளுகு என்று அவர் விளக்கிக் கொண்டிருந்தார். ஆனால், அந்தக் கண்டி ராஜா ஒரு இந்தியர் என்பது விசித்திரமல்லவா? ஸ்ரீ விக்கிரம ராஜ சிங்க மன்னன் (அல்லது கந்தசாமி) மதுரையிலிருந்து இலங்கை சென்றவர். அவரது சந்ததியார் இன்றும் இலங்கை சர்க்காரின் உபகாரச் சம்பளம் பெற்று இந்தியாவில் வாழ்ந்து வருகின்றனர்!

மிகச் சூடேறி நிற்கும் இந்திய எதிர்ப்புக் கிளர்ச்சிக்கு இது ஒரு விசித்திர அம்சம். இந்தியப் பிரச்னையை, அதற்கு அளவு மீறி முக்கியத்துவம் கொடுத்து, பிராபல்யம் அடையத் தங்களுக்குச் சாதகப்படுத்திக்கொள்கின்றனர் சில அரசியல் வாதிகள். ஆனால் அவர்களது ஒவ்வொரு நடவடிக்கையும் இலங்கைத் தீவின் சரித்திரத்துக்கே நேர் விரோதமாக வருகிறது; அதுமட்டுமல்ல, இலங்கைக்காக உழைத்த, போரிட்ட, உயிரைத் தியாகம் செய்த நூற்றுக்கணக்கான இந்தியர்களைப்பற்றிய விவரமும் அந்த சரித்திரத்தில் அடங்கியிருக்கிறது.

இந்தியாவுக்கும் இலங்கைக்கும் பொதுவாக்குள்ள நாகரிகத்தை எதிர்ப்புக் கிளர்ச்சித் தலைவர்கள் அறிந்தவர்களல்ல. இலங்கையில் இருக்கும் கல்வி முறையே இதன் காரணமாகும். "இந்திய வாழ்வுடனும், இந்தியக் கலைப் பண்புடனும் அதிகப்படியான தொந்தம் ஏற்படவேண்டும். சரித்திரத்துக்காக மட்டுமல்ல; பொருளாதார முறையிலும், தத்துவ முறையிலும் இந்தியாவின் ஒரு பாகமாக அமைந்திருக்கும் இலங்கையின் வாழ்வு, இந்தியாவோடு கட்டுப்பட்டிருக்கிறது" என்று கண்டி, டிரினிட்டி காலேஜ் மாஜி பிரின்ஸிப்பால் ரெவரண்ட் ஃப்ரேஸர் (?) கூறியுள்ளார். அவர் மேலும் கூறியிருப்பதாவது: "சென்ற ஐம்பது வருஷ காலத்தில் நமது கல்வி முறை இந்தியாவை விட்டு வெகு தூரம் விலகிச் சென்றுவிட்டது; இந்தியாவின் கலைப் பண்புகள், இந்தியாவின் வளம் இவற்றைப்பற்றி நமக்கு ஒன்றுமே தெரியாது. இதனால் ஏற்பட்ட பலனை, அரசியல் நெருக்கடியிலும் நமது செயற்கைக் கல்வியிலும் காணலாம்.'

இலங்கை மந்திரிகளின் இந்திய எதிர்ப்புக் கொள்கையை மறக்கும், மிகப் பெரிய மறக்கமுடியாத விவாதம், தெலுங்கர், வங்காளிகள், குஜராத்திகள் எல்லாம் எப்படி இந்தியரோ அப்படியே சிங்களவர்களும் இந்தியர்தாம் என்பதே. கி. மு. 50-வது வருடத்தை யொட்டி வங்க இளவரசன் விஜயா என்பவன் தேசப் பிரஷ்டம் செய்யப்பட்டான். தனது 600 தோழர்களுடன் ஒரு கப்பலில் ஏற்றப்பட்டுக் கடலில் விடப்பட்டான். கப்பல் இலங்கையை அடைந்தது. அங்கே அவன் தான் அரசாட்சியை ஏற்படுத்திக்கொண்டான். தனக்கும், தன் தோழர்களுக்கும் தென்னிந்தியப் பெண்களை மண முடித்தான். இந்த சம்பந்தம்தான் இன்றுவரை இருந்து வருகிறது.

சிங்களவாது கல்வி முறை அதிகப்படி மேனாட்டுச் சாயலைப் பெறும்வரை, தாங்கள் இந்தியரைவிட உயர்ந்தவர் என்ற எண்ணம் ஏற்படும்வரை, இந்தியரும் சிங்களவரும் பேதமின்றியே வாழ்ந்து வந்தனர். இடையில் மட்டும் சில காலம் சோழருக்கும் சிங்களவருக்கும் போர் நடந்தது.

இலங்கையின் சுதந்திரத்துக்காகப் போரிட்ட கடைசி மன்னனும் இந்தியன்தான்—ஸ்ரீ விக்கிரம ராஜ சிங்கன். எனவே இந்தியரை வெறுத்து இந்தியரோடு போரிட சிங்களவர் விரும்பும்போது, தாங்கள் இலங்கை சரித்திரத்துடனே போரிடுகிறார்கள் என்பதை சிங்கள மந்திரிகள் உணருகிறார்களா?

---

## குழந்தைகளில் ஈரல், குலை புகார்கள்.

குழந்தைகளுக்கு குலை கட்டி இருப்பதற்கு அடையாளங்கள்: சிற்சில சமயங்களில் ஜுரம் வருவது, பேதி, வாந்தி, களிமண், வெள்ளை அல்லது மண் நிறத்தில் மல மிருப்பது, துர்நாற்றம், பசியின்மை, வயிறு பெருத்திருப்பது, குழந்தை சகஜமாக ஓடியாடாமல், தூங்கு மூஞ்சியாக சோர்ந்து கிடப்பட்டது. ஜில் லென்றிருக்கும் தரையில் வயிறு படும் படியாக முகத்தை கீழே வைத்து படுத்துக் கொள்வது, மூத்திரம் உலர்ந்தால் வெண்மையான இருப்புகள் காணப்படுவது, குழந்தை இளைத்துப் போவது.

வியாதி முற்றினால், ஈரல் கல்லுப்போல் இருக்கும். அந்தப் பிரதேசத்தில் வலியிருக்கும். அதிகமான காய்ச்சல், மஞ்சள் காமாலை (கண், மூத்திரம், தோல் மஞ்சளாயிருப்பது) வயிற்றில் நீர் சேருவது, வயிறு பெருப்பது, கால்கள், முகம், கைகள், வீக்கம்.

குழந்தைகளின் ஈரல், குலை வியாதிகளுக்கு ஜம்மியின் "லிவர் கியூர்" ஒன்றுதான் தவறாமல் ஸ்திரமான பயனளிக்கும் மருந்து என்பது இந்தியா வெங்குமுள்ள டாக்டர்களின் திடமான நம்பிக்கை. லிவர் கியூர் தாமதமின்றி உபயோகிக்கப்பட்டதில், ஆயிரக் கணக்கில் குழந்தைகள், மோசமான, மரண அபாயமுள்ள விளைவுகளினின்றும் காப்பாற்றப் பட்டிருக்கின்றனர்.

கண்டு ஆலோசனை பெறும் இடங்கள்.

8, சாலைத் தெரு, மயிலாப்பூர்— (தினசரி) காலை 8 முதல் 11 வரை மாலை 3 முதல் 5 வரை

173, தங்கசாலைத் தெரு, சென்னை (ஞாயிறு) மாலை 5 முதல் 6 மணி

99, பெரிய தெரு, திருவல்லிக்கேணி (புதன், ஞாயிறு) மாலை 6-15 முதல் 7 வரை.

ஜம்மி

வெங்கட்ரமணய்யா & சன்ஸ், 8, சாலைத் தெருவு, மயிலாப்பூர், சென்னை.



### புதுக்கோட்டை சட்ட சபைக்குப் பிரேரணை

புதுக்கோட்டை சமஸ்தானத்தில் அரசியல் சீர்திருத்தம் செய்யும் பிரச்னை சம்பந்தமாக ஆராய்ச்சி செய்து அறிக்கை சமர்ப்பிக்கவும், சட்ட சபை அமைப்பு விதிகளை, மெம்பர்கட்கு அதிகப்படியான உரிமைகளும் அதிகாரங்களும் கொடுக்கத்தக்கவாறு எவ்விதம் திருத்தியமைக்கலாமென்பதுபற்றி அறிக்கை சமர்ப்பிக்கவும், இரண்டு கமிட்டிகளை அமைக்க வேண்டுமெனத் தீர்மானிக்கத் தாம் பிரேரணை கொண்டு வரப்போவதாக ஸ்ரீ டி. ஆர். வைத்தியனாதய்யர் (புதுக்கோட்டை சட்ட சபை மெம்பர்) அறிவித்திருக்கிறார்.

### அடப்பங்குளம் தண்ணீர்த் திட்டம்

மார்ச் 14உ அடப்பங்குளம் தண்ணீர்த் திட்டம் புதுக்கோட்டை பிரதம மெடிக்கல் ஆபீசர் ராவ்சாகிப் யம். ஜி. ராமசந்திர ராவ் அவர்களால் திறந்து வைக்கப்பட்டது. இதற்கு ஏற்பட்ட செலவு ரூ 30,000. புதிய தண்ணீர் தேக்கத்திலிருந்து திருக்கோகர்ணம் திருவப்பூர் ஆகிய இடங்கட்குத் தண்ணீர் சப்ளை செய்யப்படும்.

---

### திருவிதாங்கூர் ஜனத்தொகை

திருவிதாங்கூர் சமஸ்தான ஜனத்தொகை 60,70,790; ஆண்கள் 30,45,459; பெண்கள் 30,25,331. படித்த ஆண்கள் 17,82,739—58·53 சதமானம். படித்த பெண்கள் 11,11,677—39·7 சதமானம்.

---

### பஸ்ஸுகளுக்குக் கரி வாயு

எண்ணெய், பெட்ரோல் இவற்றிற்குப் பதில் கரி வாயுவை உபயோகிக்கலாமென்ற முறை திருவிதாங்கூர் சர்க்காரால் பரிசோதிக்கப்பட்டு, வெற்றி கிடைத்திருக்கிறது. அங்கு சர்க்கார் போக்குவரத்து சாதன இலாகாவின் நிர்வாகத்தில் ஓடக்கூடிய பிரயாண பஸ்ஸுகள் அனைத்தும் கூடிய விரைவில் கரி வாயுவால் ஓட்டப்படுமாம்.

---

### நெல் விலை ஏறுவதேன்?

பல ஜில்லாக்களில் நெல் விலையும், அரிசி விலையும் ஏறிக்கொண்டுப் போவதன் காரணம், வியாபாரிகளும் விவசாயிகளும் அதிக விலையை எதிர்பார்த்து கட்டுப்படுத்தி வைத்திருப்பதுதானென்று விலை நிர்ணய ஆலோசனைக் கமிட்டிகளின் அறிக்கையிலிருந்து தெரியவருகிறது.

# விற்பனை வரிச் சட்டம்

## 1939—40ம் வருட நிர்வாக அறிக்கை

1939 அக்டோபர் முதல் தேதியிலி ருந்து இந்தச் சட்டம் அமுலுக்கு வந்தது. முதல் வருஷத்தில் மொத்த விற்பனையில் அரை சதமானம் வீதம் வரிவசூல் செய்யப்பட்டது. மொத்தம் விதிக்கப்பட்ட வரித் தொகை ரூ 36,33,050ல் வசூலான தொகை ரூ 33,53,548. குறித்த தவணைக்குள் வரி செலுத்தப்படவில்லையென்ற காரணத்தால் 516 கேசுகள் தொடரப்பட்டன. பொதுவாக வரிவசூலில் அதிகக் கஷ்டம் ஏற்படவில்லையென்று வியாபார வரிக் கமிஷனர் தமது 1939-40ம் வருட அறிக்கையில் குறிப்பிடுகிறார்.

பிரஸ்தாப வருஷத்தில் இச்சட்டப்படி அளிக்கப்பட்ட லைசன்ஸுகளின் எண்ணிக்கை 11,151; இந்த இனத்தில் வசூலான கட்டணம் ரூ 1,13,323. ராமநாதபுரம் ஜில்லாவில் மட்டும் 736 லைசன்ஸுகள் வழங்கப்பட்டன. வசூலான லைசன்ஸ் கட்டணம், ரூ 6,750.

பிரஸ்தாப வருஷத்தில் வரி விதிப்புக்கு ஆளான வியாபாரிகளின் எண்ணிக்கை மாகாணம் முழுமையும் 28,994. இதில், 10,000 ரூபாய்க்கு மேல் 20,000 ரூபாய்க்கு அதிகப்படாத விற்பனைக்கு வரிசெலுத்துபவர்கள் 14,375. வருடாந்தக் கணக்கில் வரி செலுத்துபவர்கள் 10,096. மாதாந்த விற்பனை மீது வரிசெலுத்துபவர்கள் 4,523. ராமநாதபுரம் ஜில்லாவில் மட்டும் இத்தொகைகள் முறையே 758,695,105 ஆக இருந்தன (மொத்தம் 1558). விற்பனை வரியில் இந்த ஜில்லாவில் வசூலாகத் திட்டமிட்டது ரூ 1,49,979; வசூலானது ரூ 1,49,752. நிலுவை ரூ 227 தான். வேறு எந்த ஜில்லாவையும் விட இந்த ஜில்லாவில் தான் அதிக விகிதம் வசூலாகி யிருக்கிறது.

உள்நாட்டில் தயாராய், வெளிநாட்டிற்கு அனுப்பப்பட்டுள்ள கைத்தொழில் சரக்குகள் விஷயத்தில் சட்டத்தின் 7வது பிரிவுப்படி ஒரு விகிதாசாரம் தள்ளிக் கொடுக்கிறார்கள். பிரஸ்தாப வருடத்தில் இந்த இனத்தில் மொத்தம் ரூ 93,25,160க்கு ஏற்றுமதி விற்பனை நடந்திருக்கிறது. இதற்காகச் செலுத்தப்பட்ட வரித் தொகை ரூ 74,773. இதில் தள்ளிக் கொடுக்கப்பட வேண்டுமென்று கோரப்பட்ட தொகை ரூ 24,022, தள்ளுபடி செய்தது ரூ 14,485. இந்த ஜில்லாவிலிருந்து நல்லெண்ணெய், கடலை எண்ணெய், பிண்ணாக்கு, வேப்பெண்ணெய், சோப்புகள், நெக்குச்சு, வர்ண மத்தாப்புக் குச்சு, துணி முதலியன வெளியே போயிருக்கின்றன. விற்பனைத் தொகை ரூ 3,88,989. செலுத்தப்பட்ட வரி ரூ 1,945. தள்ளுபடி செய்தது ரூ 515.

இந்த இலாகாவின் நிர்வாகம் ரிவனியூ போர்டிலுள்ள நாலாவது மெம்பரான கமர்ஷியல் டாக்ஸஸ் கமிஷனருடைய ஆதீனத்தில் இருக்கிறது. ஜில்லாவுக்கு ஒரு கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசரும், பல டிப்டி கமர்ஷியல் ஆபீசர்களும் அஸிஸ்டண்டு கமர்ஷியல் டாக்ஸ் ஆபீசர்களும் இருக்கின்றனர்.

### விற்பனை வரிச் சட்டம் செல்லுபடியாகுமா?

இம்மாகாணத்தில் உற்பத்தி செய்யப்படும் பொருள்களின் முதல் விற்பனைக்கு வரி விதிப்பு சம்பந்தமாக, சென்னை விற்பனை வரிச் சட்டத்தில், முக்கியமாக உற்பத்திப் பொருள் விற்பனை சம்பந்தமாகவும், வரி சம்பந்தமாயும் உள்ள சட்டப்பகுதிகள் இம்மாகாணச் சட்டசபையின் அதிகார வரம்பை மீறியவை யென்று தொடரப்பட்ட வழக்கில் விஜய நகரம் ஜில்லா முன்சீப் வாதியின் சார்பாகத் தீர்ப்பளித்து சென்னை சர்க்கார் வசூலித்த வரிப்பணத்தைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமென்று குறிப்பிட்டார். இந்தத் தீர்ப்பின் மேல் செஷன்ஸ் கோர்ட்டில் சர்க்கார் தரப்பில் அப்பீல் செய்யப்பட்டது. இவ்வழக்கில் சம்பந்தப்பட்ட பிரச்னை மாகாண சர்க்காருக்கு உள்ள அதிகாரம் பற்றியும், இந்திய சர்க்கார் சட்டப்பரிசீலனை பற்றியும் இருப்பதால், வழக்கை ஹைகோர்ட்டுக்கு மாற்றவேண்டுமென அட்வகேட் ஜெனரல் மனுச்செய்தார். வாதி தரப்பிலும் இதற்கு ஒத்துக் கொள்ளப்பட்டதால், வழக்கை அவ்வாறு மாற்ற ஹைகோர்ட்டார் அனுமதி யளித்துள்ளனர். அப்பீல் விசாரணை கோடை விடுமுறைக்குப் பின் நடைபெறும்.

யுத்தம் காரணமாகப் பிரிட்டனில், நீண்டகாலமாகத் தரிசாகக் கிடந்து வந்த பூமிகள் எல்லாம் உழுது பண்படுத்தப்பட்டு நிலங்களாக்கப்படுகின்றன. மோட்டார் யந்திரங்கள் பலன்படாத இடங்களில் மேலே காட்டியுள்ள மிகச் சிறந்த ரகக் குதிரைகளைக் கட்டி உழுகிறார்கள்.

### கவுன்சிலர் தமிழில் பேச மறுத்தார்:
#### அங்கத்தினர்கள் வெளியேறினர்

கோவை நகரசபையின் பட்ஜட் கூட்டம் மார்ச் 11ஆ கூடியது. ஸ்ரீ யன். சுப்ரமணிய ஐயர் ஆங்கிலத்தில் பேச ஆரம்பித்தபோது இரு அங்கத்தினர்கள் தமிழில் பேசும்படி கேட்டுக்கொண்டனர். தமது பட்ஜட்டைப்பற்றிய அபிப்பிராயம் கவுன்சிலி லுள்ள அதிகாரிகளுக்காகவே முக்கியமாகவும் பேசப்படுவதால், தாம் ஆங்கிலத்தில் பேசுவதாகக் குறிப்பிட்டார். உடனே ஆட்சேபித்த இருவரும் வேறு சிலரும கூட்டத்தை விட்டு வெளியேறினர். டாக்டர் நடேசன் பின்னர் தமிழில் பேசினார். போதுமான அங்கத்தினர் இல்லாததால் கூட்டம் ஒத்திவைக்கப்பட்டது.





### ஸர் ஸி. வி. ராமனுக்கு அமெரிக்கர் அழைப்பு

பிராங்லின் பதக்கப் பரிசைப் பெற்றுள்ள ஸர் ஸி. வி. ராமனை, பிலாடல்பியா பிராங்லின் ஸ்தாபனத்தார், பிராங்லின் தினக் கொண்டாட்டத்திற்கு வருமாறு அழைத்திருக்கின்றனர். இது அமெரிக்காவில் விஞ்ஞானிகள் கொண்டாட்ட தினமாகும். மிகப் பெரிய பௌதிக சாஸ்திரிகள் பலர் இவ்விழாவில் கலந்துகொள்வார்கள்.

### ஆதிதிராவிட மாணவர்களை அதிகம் சேர்க்க

பள்ளிக்கூடங்களுக்கு ஆதிதிராவிடப் பிள்ளைகள் அதிகப்படி படிக்க வருவதற்காக, கும்பகோணம் நகர சபை ஒரு திட்டம் போட்டிருக்கிறது. மத்தியானச் சாப்பாடும், சாரண உடைகளும், பதிவு கட்டணங்களும் இலவசமாகக் கொடுக்கத் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.



# அழகர் கோவிலில் விதவா விவாகம்

### ஜில்லா போர்டு உபதலைவர் மணமகன்

மார்ச் 23உ அழகர் கோவிலில் ஸ்ரீமதி யன். மீனாட்சி (சித்தையன் கோட்டை விதவை)க்கும் கோபிநாயக்கன்பட்டி ஸ்ரீ ஜி. வெங்கடாசலபதி (மதுரை ஜில்லா போர்டு உபதலைவர்)க்கும் விவாகம் நடைபெற்றது. தமிழ்நாடு ஹரிஜன சேவக சங்கத்தலைவர் ஸ்ரீ ஏ. வைத்தியநாதய்யர், த. நா. கா. கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ சங்கரன் முதலிய பல பிரமுகர்கள் விஜயஞ் செய்து சிறப்பித்தனர். மதுரை ஜில்லா போர்டுக் காங்கிரஸ் கட்சித் தலைவர் ஸ்ரீ பட்டாபிராமன் புரோகிதராக இருந்து நடத்தி வைத்தார்.

### கல்யாண கஷ்டத்தை நிவர்த்திக்க

இந்துச் சட்டத்தில், ஒரே கோத்திரத்தைச் சேர்ந்தவர்கள் கல்யாணம் செய்து கொள்ளக் கூடாதென்றிருக்கும் தடையை நிவர்த்திக்க மத்திய அஸம்பிளியில் ஸ்ரீ தேஷ்முக் கொண்டு வந்த மசோதாவைப் பற்றிப் பொதுஜன அபிப்பிராயம் அறிய அதைக் கெஸட்டில் பிரசுரிக்கத் தீர்மானிக்கப்பட்டது.

### பார்லிமெண்டரிக் காரியதரிசியாக ஸ்திரீ நியமனம்

வங்க அஸம்பிளி மெம்பர் ஸ்ரீமதி ஹஸினா முர்ஷெத் பார்லிமெண்டரிக் காரியதரிசியாகக் கவர்னரால் நியமிக்கப்பட்டிருக்கிறார். இவர் பிரதம மந்திரியின் அந்தரங்கக் காரியதரிசியின் மனைவியாகும்.

### ஜில்லா போர்டுகளைக் கலைக்க மசோதா திருத்தப்படும்

கலைக்கப்பட்டு திருத்தியமைக்கப்படவிருக்கும் ஒரு ஜில்லா போர்டை, மூன்று வருஷ காலத்திற்கு அதிகப்படாமல் நிறுத்திவைக்க அதிகாரமளிக்கும்படி ஸ்தல ஸ்தாபனச் சட்டத்தின் ஷரத்துகளைத் திருத்த சென்னை சர்க்கார் உத்தேசித்துள்ளனர். திருத்த விதிகள் கெஸட்டில் பிரசுரிக்கப்பட்டிருக்கின்றன.

### ஏமாற்றியதாக

வேலையில்லாது திரியும் சுந்தரம் சேர்வை யென்பவன், தான் நகரப் பாதுகாப்புப் படையைச் சேர்ந்தவன் என்று சொல்லி, போக்குவரத்து விதிகளை மீறியதற்காகப் பணம் கொடுக்கும்படி பல வண்டிக்காரர்களைக் கட்டாயப்படுத்தியதற்காக சிவகெங்கையில் கைது செய்யப்பட்டிருக்கிறான்.

உயர்ந்த தத்துவங்களை நாம் இருந்த இடத்திலேயே உணர்ந்து கொள்ள முடியாது; ஆனால், அவற்றைத் தேடி ஆராய்ச்சி செய்ய வேண்டும். —'திபியன்'

### ஜுரநோய் ஆராய்ச்சி நிர்ணயங்கள்

#### உடம்பு தேற உணவு முக்கியம்

ஜுர நோய்களை டாக்டர்கள் ஆராய்ச்சி செய்து அரிய விஷயங்கள் பல வெளியிட்டுள்ளனர். ஜுரத்தின் சாதாரண அறிகுறிகளாவன—தேக உஷ்ணதிக்கம் கண்கள் மீது கடுமையான மண்டையிடி, ஒரு நிமிஷம் சிலிர்ப்பு, மறு நிமிஷம் தாளமுடியாத உடற் சோர்வு—இவையனைத்தும், விஷங்கள் உங்கள் நரம்புகளையும் தசை நார்களையும் தாக்குவதால் தான் என அவர்கள் கூறுகின்றனர். நீங்கள் க்ஷணப்பொழுதில் சோர்வற்று பலஹீனமடைகிறீர்கள்.

ஜீர்ணக் கருவிகள் பலஹீனமாயிருப்பதால் சாதாரண உணவுகள் செரிக்காது. ஜீவனற்றிருக்கும் ஜீவாணுக்களை மீண்டும் உயிர்ப்பிக்க ஹார்லிக்ஸே தகுந்த ஆகாரம். அது எளிதில் ஜீரணமாகி உடம்பிற்கு பலத்தை யூட்டி விரைவில் தேற்றுகிறது. நம் நாட்டில் முக்கிய வைத்தியசாலைகளி லெங்கும் ஹார்லிக்ஸை ஜுரத்திற்கு பத்திய உணவாக ஆதரித்து வருகிறார்கள்.

# சத்யாக்கிரகச் செய்திகள்

### டாக்டர் பட்டாபி கைது

ஆமதாபாத் நகர சபைத் தலைவர் ஸ்ரீ ராமன்லால் மார்ச் 18உ சத்யாக்ரகம் செய்து கைதியானார்.

மகாத்மா காந்தியின் காரியதரிசி ஸ்ரீ பியாரிலாலுக்கு ஆறு மாதக் கடுங்காவல் தண்டனையும் 'பி' வகுப்பும் அளிக்கப்பட்டிருக்கின்றன.

ஆந்திர மாகாணக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் டாக்டர் பட்டாபி சீதாராமையா மார்ச் 19உ இரவு மசூலிபட்டணத்தில் கைது செய்யப்பட்டு வேலூருக்குக் கொண்டு போகப்பட்டார். ஷை கமிட்டிக் காரியதரிசி ஸ்ரீ காலாவெங்கடராவும் கைது செய்யப்பட்டார். அவருக்கு 6 மாதக் கடுங்காவல் தண்டனை விதிக்கப்பட்டிருக்கிறது.

### ஸ்ரீ நாடிமுத்துப் பிள்ளை விடுதலை

தஞ்சை ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ வி. நாடிமுத்துப் பிள்ளை திருச்சிச் சிறையிலிருந்து விடுதலை செய்யப்பட்டிருக்கிறார்.

### 82 வயதுக் கிழவர் கைது

கிருஷ்ணகிரி தாலூகா காங்கிரஸ் கமிட்டித் தலைவர் ஸ்ரீ பர வாசுதேவய்யா (82 வயது) பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டிருக்கிறார்.

### சத்யாக்ரகி மரணம்

கொல்லங் கோட்டைச் சேர்ந்த ஸ்ரீ சே. ராமலிங்க முதலியார் ஜனவரியிலிருந்து சத்யாக்ரகம் செய்து கைது செய்யப்படாமல் டில்லி நோக்கிப் புறப்பட்டு சில நாட்களுக்கு முன்பு கோவை போய்ச் சேர்ந்தவருக்குத் திடீரென்று காமாலையும் ரத்தக் கொதிப்பும் உண்டாகி ஆஸ்பத்திரியில் இறந்தார்.

### ஸ்ரீ போஸ் வழக்கு

இந்தியப் பாதுகாப்புச் சட்டத்தின்படி ஸ்ரீ சுபாஷ் சந்திர போஸ் மீது அலிப்பூர் அடிஷனல் ஜில்லா மாஜிஸ்திரேட் முன்பு கொண்டுவரப்பட்ட வழக்கு தேதி குறிப்பிடாமல் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

### யுகஸ்லேவிய மந்திரிகள் ராஜினமா

ஜெர்மன் நிபந்தனைகளை எதிர்த்த யுகஸ்லேவிய மந்திரிகளில் மூவர் ராஜினமாச் செய்து விட்டனர்.

### கவர்னருக்கு நான்காவது ஆலோசகர்

இதுவரைச் சென்னை கவர்னருக்கு மூன்று ஆலோசகர்கள் இருந்து வந்தனர். இப்போது நான்காவது ஆலோசகர் பதவி யேற்படுத்தப்பட்டு, அதில் மிஸ்டர் டி. ஆஸ்டின் நியமிக்கப்பட்டிருக்கிறார். மற்றவர்கள் மெஸர்ஸ் ஜி. டி. போக், எச். எம். ஹூட், டி. ஜி. ருதர் போர்டு.

# ரஷ்ய—துருக்கி ஒப்பந்தம்

### சோவியத் சர்க்கார் உறுதி

துருக்கிக்கும் இன்னொரு நாட்டுக்கும் மாச்சரியம் முற்றுமானால், அந்நிலையில் துருக்கிக்குச் சங்கடம் விளைவிக்கத்தக்க காரியமெதையும் தாங்கள் செய்யப் போவதில்லை யென்று சோவியத் சர்க்கார் துருக்கிக்கு உறுதி கூறியிருக்கின்றனராம். துருக்கிக்கும் ரஷ்யாவுக்கும் ஏற்கனவே ஒரு அனுக்ரமிப்பு ஒப்பந்தம் இருந்து வருகிறது.

### பர்மாவுக்குத் தங்க ஏற்றுமதி

ரங்கூன் ரிசர்வ் பாங்கி மானேஜர் உத்தரவின்றி பிரிட்டிஷ் பர்மாவுக்குள் தங்க நாணயம், தங்கக்கட்டி இறக்குமதி செய்யக் கூடாது; அதேபோல பிரிட்டிஷ் இந்தியா தவிர வேறு நாடுகளுக்குப் பர்மாவிலிருந்து கொண்டுபோகக் கூடாதென்றும் உத்தரவு பிறப்பிக்கப்பட்டிருக்கிறது.

### வரி மசோதா நிறைவேறியது

மார்ச் 22உ கூடிய இந்திய அஸம்பிளிக் கூட்டத்தில் வரி மசோதா நிறைவேறியது. சாதகமாக 40 பேர்களும், பாதகமாக 19 பேர்களும் வாக்களித்தனர். முஸ்லிம் லீக் கட்சியினரும், தேசியக் கட்சியினரும் எதிராக வாக்களித்தனர்.

### ஜில்லாக் கோர்ட்டில் ஹைக்கோர்ட் ஜட்ஜ் வழக்கு

கொல்லம் பாங்கியில் தமக்கு 100 பங்குகள் இருந்ததாயும், அவற்றிற்காக 2500 ரூ. செலுத்தியிருந்ததாயும், தம்முடைய சம்மதமில்லாலே இணைக்கப்பட்ட திருவிதாங்கூர் அன் கொல்லம் பாங்கிக்குத் தமது பங்குகள் மாற்றப்பட்டதாயும், ஆகவே தொகை முழுவதும் தமக்குக் கிடைக்க வேண்டுமென்றும் கோரி திருவிதாங்கூர் ஹைக்கோர்ட் பிரதம ஜட்ஜ் ராவ்பகதூர் ஆப்ரஹாம் வர்கீஸ் கொல்லம் அடிஷனல் ஜில்லாக் கோர்ட்டில் தொடர்ந்திருக்கும் வழக்கில் வாதி விசாரணை செய்யப்பட்டு கேஸ் ஒத்திவைக்கப்பட்டிருக்கிறது.

### முசோலினிக்குப் பைத்தியம்
#### தோல்வியால் ஏற்பட்ட துன்பம்

தமது படைகளுக்கு ஏற்பட்ட பெருத்த நஷ்டத்தால் முஸோலினி பைத்தியம் பிடிக்கும் நிலைமைக்கு வந்துவிட்டாரென ஜினிவாவிலிருந்து வந்த செய்தி கூறுகிறது. தோல்வியால் அவருக்கு நரம்புத் தளர்ச்சி ஏற்பட்டுவிட்டதென்றும், அதனால் அவருக்குத் தூக்கமே கிடையாதென்றும், படுக்கையறையில் பைத்தியம் பிடித்தவர்போல் அலைந்து கொண்டிருக்கிறாரென்றும் அச்செய்தி கூறுகிறது.

முறையோடும், முறை தவறியும் இருக்கும் ஒரு ஜீவன் உண்டு என்றால், அந்த ஜீவன்தான் மனிதன். —திபியன்.

# பிரிட்டனுக்கு 20,000 விமானங்கள்

### அமெரிக்காவின் திட்டம்

அடுத்த 18 மாத காலத்துக்குள் 20,000 யுத்த விமானங்கள் தயார் செய்து பிரிட்டனுக்கு அனுப்ப அமெரிக்க அதிகாரிகள் ஒரு திட்டம் போட்டிருக்கின்றனர். பிப்ரவரி மாதம் அமெரிக்கத் தொழிற்சாலைகளில் 3750 விமானங்கள் தயார் செய்யப்பட்டன.

### இலங்கையில் கட்டுப்பாடு மசோதா

இலங்கைக் குடியேற்றக் கட்டுப்பாடு மசோதாக்கள் ராஜாங்க சபை முன் விவாதத்துக்கு வந்துவிட்டன. இவற்றைத் திருப்திகரமாக நிறைவேற்ற அனுமதிக்கப்படாவிட்டால், இலங்கையரல்லாதாரையும், அவர்களது சரக்குகளையும் பகிஷ்கரிப்பதென சிங்கள மகா சபை தீர்மானித்திருக்கிறதாம்.

குடியேற்றப் பிரச்னை திருப்திகரமாகத் தீரும் வரையில் யுத்த நிதிக்கு ஸ்தல ஸ்தாபனங்கள் சில பண உதவியளிக்க அதிகாரம் கொடுப்பதில்லை யென்று ஸ்தல ஸ்தாபன இலாகா நிர்வாகக் கமிட்டி முடிவு செய்திருக்கிறதாம். இந்த இலாகா மந்திரி ஸ்ரீ பண்டார நாயக்கவாகும்.

# குமரன்

காரைக்குடி
விக்கிரம-ஷூ பங்குனி-மீ 14-வ

## ரயில்வே ஹோட்டல்

ரயில் வண்டி நிலையங்களில் ரயில்வே கம்பனியார்களே ஹோட்டல்களை ஏற்படுத்தியிருக்கின்றனர். இதில் பிராமணருக்கென்றும் பிராமணரல்லாதாருக்கென்றும் இடம் தனித் தனியாக ஒதுக்கப்பட்டு போர்டும் போடப்பட்டிருக்கிறது. பிராமணரை யெல்லாம் ஒரு ஜாதி யென்றும், மற்றவர்களெல்லாம் ஒரு ஜாதி யென்றும் பிரித்தவன் புத்தியின் கொடுமை மனு தர்ம சாஸ்திரம் தயாரித்தவனின் கொடுமையை விடப் பெரிதாகும். பிராமணரில் பல்வேறு வகுப்புண்டு. ஒரு ஜாதிப் பிராமணர் வீட்டுக்கு மற்றொரு ஜாதியார் சென்று உட்கார்ந்தால், அவர் எழுந்து சென்றதும் இருந்த இடத்திற்குத் தண்ணீர் தெளித்துச் சுத்தமாக்குவதையும் காணமுடியும். உண்பதிலும் சம்பந்தம் செய்வதிலும் ஒரு பிரிவுக்கும் மற்றொரு பிரிவுக்கும், பிராமணருக்கும் பறையருக்குமிடையி லிருக்கிற அவ்வளவு வேறுபாடுகூட உண்டென்று சொல்லலாம். அப்படிப்பட்ட பல்வேறு பிரிவுக்கும் ஒரு இடம் ஒதுக்கப்பட்டது. அப்படியே பிராமணரல்லாதாரில் எத்தனையோ ஜாதிப் பிரிவுகள் உண்டு. இவர்கள் யாவருக்கும் ஒரு இடம் ஒதுக்கப்பட்டது.

ஒரு ஜாதியார் செய்ததை மற்றொரு ஜாதியார் சாப்பிடக் கூடாதென்பதொரு புற மிருக்கட்டும். ஒருவர் சாப்பிடுவதையோ அல்லது சாப்பிடுகிற பதார்த்தங்களையோ மற்றவர் பார்க்கக் கூடாதென்பதும் கவனிக்கத்தக்கது. இதற்கு மேல், சமைத்த பொருள்கள் பிராமணரல்லாதவர்க்குப் போடப்பட்டுவிட்டால் மீதியிருப்பதை 'சேஷமாகிவிட்டது' என்று பிராமணர் சாப்பிடமாட்டார். இத்தனைக்கும் ஆபத்தாக ஹோட்டல்கள் ஏற்பட்டு விட்டன. ஹோட்டல் ஏற்பட்ட தினத்திலேயே வைதிகம் சீட்டு வாங்கி விட்டதென்று கூறலாம். இதனையறிந்தே தேர்ந்த வைதிகர்கள் ஹோட்டல்களில் நுழைகிறதில்லை. ஹோட்டல்களில் புகுகிற பிராமணனை பிராமணார்த்தம் முதலியவற்றுக்கு வரிக்கிறதுமில்லை. சென்ற சில ஆண்டுகட்கு முன்புவரை இப்படிப்பட்ட நிகழ்ச்சிகளில் வைதிகர்கள் சண்டையிட்டுக் கொண்டிருந்தார்கள்.

இப்போதைய நிலைமையில் இப்படிப்பட்ட போர்டுக்கு இடமேயில்லை. ரயில் பிளாட் பாரத்தில் மறைத்துத் தின்னுகிற பிராமணனை இல்லையென்று கூறலாம். தீர்த்தம் சாப்பிட்டாலும் துணியைக் கொண்டு மறைத்துச் சாப்பிட்ட காலம் இருந்தது. இன்று வெகுதூரம் மாறிப்போய்விட்டது. திருஷ்டி தோஷம் பெரும்பாலும் கைவிடப்பட்டதென்னலாம். ரோட்டில் பகிரங்கமாக சாப்பிடலாம்; ஹோட்டல்களில் மட்டும் மறைவிடத்தில் சாப்பிட வேண்டுமென்று கூறுவதில் பொருளொன்றுமில்லை. சாதாரண ஹோட்டல்களில் பார்த்தால் எத்தனையோ தட்டிகள் வைத்திருப்பார்கள். பிராமண ரல்லாதாராகுலும் ஆளுக்கொரு தட்டியை இடையில் வைப்பார்கள். பிராமணரல்லாதார் எல்லாரும் ஒரே ஜாதி யென்று எவரும் கூறிவிட இடமில்லை. அப்படியேதான் பிராமணரும். ரயில்வே ஹோட்டல்களில் பிராமணரே சமையல் செய்கிறார்; பரிமாறுகிறார். திருஷ்டி தோஷமோ அங்கே சாப்பிடுகிற எந்த பிராமணருக்கும் கிடையாது. ஆனால் போர்டு மட்டும் ஏன் தொங்கியது? ஒவ்வொருவரும் யோசித்துப் பார்க்கவேண்டிய விஷயந்தான் இது!

ஒரு ஜாதியார் "எங்கட்கு ஒரு ஸீட் ரிசர்வ் செய்யவேண்டும்" என்றால் அது வகுப்புவாதமாகுமென்று கருதிய காங்கிரஸ் கவர்ன்மெண்டு, இந்தப் பொருளற்ற பக்கா வகுப்பு வாதத்தை நீக்க முற்படவில்லையென்று யாராவது கூறினால் தலை கவிழத்தான் வேண்டும். இந்த போர்டு இது வரைத் தொங்கியது ஆச்சரியப்படத்தக்கதும் வெட்கப்படத்தக்கதுமான விஷயந்தான்.

ராமசாமிப் பெரியார் இதில் தலையிட்டுக் கிளர்ச்சி செய்ததன் பயனாக இந்த போர்டுகள் அறுந்து விழுந்தன. ராமசாமிப் பெரியார் செய்வதெல்லாம் பிசகு என்று 'பெரு வெட்டாக'ச் சொல்லுபவர்களும் இதனைப் பிசகென்று கூறத் துணியமாட்டார்கள். இவ்விஷயமானது நியாயம் நிரம்பியது; செய்யத்தக்கது; செய்ய வேண்டியது; ராமசாமிப் பெரியாரால் இது நிகழ்ந்தது என்று கூற முற்பட நாணுபவர்களின் மனம் மிகச் சுருங்கிய போக்குள்ளதென்று கூற வேண்டும். யார் செய்தாலென்ன? நன்மையும் நியாயமும் எங்கிருந்து வந்தாலென்ன? ரயில்வே ஹோட்டல்களில் தொங்கிக் கொண்டிருந்த பொருளற்ற, அசட்டுத்தனமான போர்டுகள் ஒழிந்தமை ஹிந்து சமூகத்துக்கே பெருமைதருவதாகும். இதற்கு முன்னின்று வெற்றி பெற்ற ராமசாமிப் பெரியாருக்கும், நியாயத்தை இப்பொழுதாவது உணர்ந்து செய்த ரயில்வே போர்டாருக்கும் வாழ்த்துக் கூறுகிறோம்.

---

### காரைக்குடி நகர சபைக் கூட்டம்

காரைக்குடி நகர சபையின் சாதாரணக் கூட்டமொன்று மார்ச் 29வ சனிக்கிழமை மாலை 5 மணிக்கு "சாந்தி மாளிகை" யில் நடைபெறும்.

### ஹிந்திப் பரீட்சைகளில் தேறியவர்

சென்ற பிப்ரவரி-மீ 9வ காரைக்குடியில் நடைபெற்ற ஹிந்தி ஆரம்பப் பரீக்ஷைகளில் கலந்துகொண்ட 24 மாணுக்கர்களில் தேறியவர்களின் விவரம்:—

ப்ராத்மிக்:- முதல் வகுப்பு M. சுந்தரராஜன்; V. ராமநாதன்; R. மணி; T. ஸ்ரீனிவாஸன்; M. கணபதி இரண்டாம் வகுப்பு: RM. பழனியப்பன்; SM. பழனியப்பன்; S. அழகப்பன்; K. ஜகதீசன்.

மத்யமா:- இரண்டாம் வகுப்பு R. D. சௌந்தரராஜன்; S. ரங்கராஜன்; K. S. சாரங்கபாணி; V. ராஜலக்ஷ்மி; S. பாலசுந்தரம்; K. S. ராமசுப்ரமணியம்.

ராஷ்ட்ரபாஷா:- இரண்டாம் வகுப்பு: P. நீலகண்டன்.

### S. S L. C. பரீட்சை

இவ்வருஷம் S. S. L. C. பரீட்சைக்கு, காரைக்குடியும் ஒரு ஸென்டராக ஏற்படுத்தப்பட்டு, பள்ளத்தூர் ஹைஸ்கூல் மாணவர்களும் இங்கு யஸ். யம். யஸ். ஹைஸ்கூலிலேயே பரீட்சைக்கு எழுதிவருகின்றனர். சென்ற திங்கட்கிழமை பரீட்சை ஆரம்பித்தது; ஏப்ரல் 1-ந் தேதி வரை நடைபெறும். காரைக்குடி ஹைஸ்கூலிலிருந்து 49 மாணவர்களும், பள்ளத்தூர் ஹைஸ்கூலிலிருந்து 36 மாணவர்களும் பரீட்சைக்கு எழுதுகின்றனர். இரண்டாவது முறையாகப் பரீட்சைக்கு ஆஜராகும் மாணவரில் ஒரு சிலரைத்தவிர, மற்ற எல்லா மாணவர்களும் ஆங்கிலம் தவிர இதர பாடங்கள் அனைத்தையும் தமிழிலேயே எழுதி வருவது குறிப்பிடத்தக்கது.

மாகாணம் முழுமையும் 25,800 மாணவர்கள் (சென்ற வருடத் தொகையிலிருந்து 2,300 அதிகம்) இந்தப் பரீட்சைக்கு ஆஜராகின்றனர். இவரில் 50 சதமானத்துக்குக் குறையாத பேர் தாய்மொழியிலேயே விடையெழுதுகின்றவராவர். இதனால் தாய்பாஷைக் கேள்விப் பத்திரங்களின் தொகையும் பரிசோதகர்களின் தொகையும் அதிகரித்திருக்கின்றன. மொத்தம் 350 இடங்களில் பரீட்சைகள் நடைபெறுகின்றன.

## காரைக்குடி சத்யாக்கிரகிகள்

### ஸ்ரீ வசந்தனுக்கு 5 நாள்

காரைக்குடி மகார்நோன்புப் பொட்டலில் சத்யாக்ரகம் செய்ததாகக் கைது செய்யப்பட்டு, நியூஸன்ஸ் சட்டப்படி வழக்குத் தொடரப்பட்ட ஸ்ரீ R. முத்தையா, ஜி. விஸ்வநாத சர்மா ஆகிய இருவரையும் காரைக்குடி பெஞ்சுக் கோர்ட் தலைவர் ஸ்ரீ முத்துவேல் பிள்ளை விடுதலை செய்து விட்டார். மகார்நோன்புப் பொட்டல் ஒரு பொது இடமல்லவென்று அவர் கருதினர். மார்ச் 14வ சத்யாக்ரகம் செய்து கைது செய்யப்பட்ட ஸ்ரீ வசந்தன், மணிக்கூண்டருகே சத்யாக்ரகம் செய்ததாக நியூஸன்ஸ் சட்டப்படி குற்றம் சாட்டப்பட்டு அவருக்கு 5 நாள் வெறுங்காவல் விதிக்கப்பட்டது.

விடுதலையான ஸ்ரீமான்கள் முத்தையாவும் விஸ்வநாத சர்மாவும் ஊர் ஊராகப் பிரசாரம் செய்து வருகின்றனர். சென்ற செவ்வாய்க் கிழமை அவர்கள் புதுவயல் ரேரு சதுக்கத்தில் மாலை 5-30 மணிக்கு ஏராளமான மக்கள் கூடியிருந்த பெருங் கூட்டத்தில் யுத்த எதிர்ப்புப் பிரசாரமும், நிர்மாணத் திட்டப் பிரசாரமும் செய்தனர். பின் வீதிகள் வழியே ஊர்வலமாக யுத்த எதிப்பு கோஷம் செய்து சென்றனர். 26வ காலை இராமநாதபுரம் ஜில்லா எல்லையைக் கடந்து தஞ்சை ஜில்லாவுக்குள் புகுந்தனர். அறந்தாங்கி நோக்கிச் சென்றனர்.

### சத்தியாக்ரகம் செய்ய அனுமதி

காரைக்குடியில் 10 பேர்கட்குச் சத்யாக்ரகம் செய்ய மகாத்மா விடமிருந்து அனுமதி வந்திருப்பதாகவும், இவர்கள் ஏப்ரல் இறுதிக்குள் சத்யாக்ரகம் செய்வார்கள் என்றும் தெரிகிறது.

சிவகெங்கை தாலுகாவில் 18 பேர்கட்கு அனுமதி கிடைத்திருக்கிறது. அவர்களும் ஏப்ரல் 30 தேதிக்குள் சத்யாக்ரகம் செய்வார்கள்.

---

### ஷோக்களுக்குத் தடை உத்தரவு

காரைக்குடியிலும், கோவிலூரிலும் நடைபெற்று வந்த ஷோக்களிடையே பலத்த போட்டி யேற்பட்டது காரணமாகக் கலகங்களும் அவை காரணமாகப் பொது ஜன சமாதான பங்கமும் ஏற்படக் கூடுமென்று கருத இடமிருக்கிறபடியால், 19-3-41 முதல் இரண்டு மாத காலத்திற்கு காரைக்குடிப் போலீஸ் ஸ்டேஷன் அதிகார எல்லைக்குட்பட்ட எந்த இடத்திலும் ஷோக்கள் நடத்தக் கூடாதென்று திருப்பத்தூர் தாலூகா மாஜிஸ்திரேட் தடை உத்தரவு பிறப்பித்திருக்கிறார்.

---

### தாழ்த்தப்பட்டவர்கட்கு 'பாக்கிஸ்தான்'

தாழ்த்தப்பட்டவர்கட்கான "பாக்கிஸ்தான்" திட்டமொன்றை டாக்டர் அம்பெத்கார் ஜலகானில் கூடிய கீழ் கந்தேஷ் தலித் மகாநாட்டில் வெளிப்படுத்தினர். தாழ்த்தப்பட்ட வகுப்பினர் கிராமங்களை விட்டு நகரங்களுக்குச் சென்று குடியேற வேண்டுமென்றும் அவர் கூறினர்.

---

### சநாதனிகளின் வேண்டுகோள்

யுத்தம் முடிவது வரை ஆலயப் பிரவேசப் பிரகடனத்தை நிறுத்திவைக்கும்படியும், பிராமணர்களைப் பாதிக்காதபடி சாரதாச் சட்டத்தைத் திருத்தும்படியும், தெ. இ. ரயில்வேயில் முன்போல பிராமணருக்கும், அல்லாதாருக்கும் தனித் தனி இடவசதி அமைக்குமாறும் கேட்டுக்கொள்வதாக ராமேஸ்வரத்தில் கூடிய சநாதனிகள் தீர்மானம் நிறைவேற்றியிருக்கின்றனர்.

---

### 'தாருல் இஸ்லாம்' தினசரி

அல்ஹாஜ் பி. தாவுத் ஷா சாகிப் பி. ஏ. அவர்களை ஆசிரியராகக் கொண்டு இதுகாறும் வாரப்பதிப்பாக வெளி வந்து கொண்டிருந்த "தாருல் இஸ்லாம்", உள் நாட்டு, அயல் நாட்டுத் தந்திச் செய்திகளுடன் பங்குனி 8-ந்தேதி முதல் தினசரியாக வெளிவருகிறது. தனிப்பிரதி 9 பைசா.

## காரைக்குடியில் கம்பன் திருநாள்

கவியினுக் கணியாம் கம்பன் திருநாள் விக்ரம பங்குனி 26, 27, 28, 29 (ஏப்ரல் 8, 9, 10, 11) செவ்வாய், புதன், வியாழன், வெள்ளி ஆகிய நான்கு தினங்களிலும் காரைக்குடியில் கொண்டாடப்படும். வடநாட்டு, தென்னாட்டுப் பேரறிஞர்கள் பலர் விழாவிற் கலந்து சிறப்பிக்க அன்புடன் இசைந்துள்ளார்கள் என்று அறிவிக்கப்படுகிறது. கம்பன் திருநாள் நிகழ்ச்சிகள் திருச்சி ரேடியோ மூலம் ஒலிபரப்பப்படும்.

---

### இந்திய போலீஸ் இலாகா

இந்தியப் போலீஸ் இலாகாப் பதவிகள் மொத்தம் 632. 1940 ஜனவரி முதல் தேதி யன்று இதில் 422 ஐரோப்பியர்களும் 194 இந்தியர்களும் இருந்தார்கள் என்று ராஜாங்க சபையில் அறிவிக்கப்பட்டது.

---

### ஸர். ஸி. வி. ராமன் குமாரர்

பாதுகாப்புச் சட்டப்படி கைது செய்யப்பட்டிருக்கும் ஸ்ரீமான் சந்திரசேகரனை (ஸர். ஸி. வி. ராமன் குமாரர்) காவலில் வைக்கும்படி சர்க்கார் உத்தரவிட்டிருக்கின்றனர். அவர் வேலூருக்குக் கொண்டுபோகப்பட்டிருக்கிறார்.

---

### மாஜி மேயருக்கு 2 வருஷம்

கராச்சி துறைமுக டிரஸ்ட் சதியாலோசனை வழக்கில் மாஜி மேயர் கான்பகதூர் ஏ. எச். மாமாவுக்கு 2 வருட வெறுங்காவலும் 1000 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டிருக்கின்றன.

---

### யுகோவும் அடிபணிந்தது

யுகஸ்லேவியா ஜர்மனிக்கு அடிபணிந்துவிட்டது. அச்சு நாடுகளுடன் ஒப்பந்தம் செய்து கொள்ள அது இசைந்து விட்டது. சர்க்காரின் போக்குபற்றி ஜனங்களிடையே ஆத்திரம் அதிகரித்து வருவதாயும், ஓரிடத்தில் 30,000 பேர் கூடி ஹிட்லருக்கு விரோதமாக ஆர்ப்பாட்டம் செய்ததாயும் ஒரு செய்தி கூறுகிறது. பிரிட்டிஷ் சர்க்கார் அந்நாட்டுக்கு ஒரு கடைசி நிமிஷ வேண்டுகோளையும் எச்சரிக்கையையும் அனுப்பி யிருக்கின்றனர்.

### ஒப்பந்தம் கையெழுத்தாயிற்று

மார்ச் 25வ நண்பகல், யுகஸ்லேவிய—ஜர்மன் ஒப்பந்தம் வீயன்னாவில் கையெழுத்தாய்விட்டதாக ஜர்மன் நியூஸ் ஏஜன்ஸி அறிவித்திருக்கிறது. ஹிட்லரும் பிரசன்னமாயிருந்தார். ஜர்மன் அயல்நாட்டு மந்திரி வான் ரிப்பன்டிராப், இத்தாலிய வெளிநாட்டு மந்திரி கவுண்ட் ஸியானோ இருவரும் வந்திருந்தனர்.

இதில் ராணுவ சம்பந்தமான ஒத்துழைப்பு அம்சம் இல்லை யென்றும், பொருளாதார ஒத்துழைப்பே கோரப்பட்டிருப்பதாயும், யுகஸ்லேவியாவின் ரயில் பாதைகளை உபயோகிக்க ஜர்மனி அனுமதிக்கப்பட வேண்டுமென்பதே முக்கிய ஷரத்தென்றும் 'நியூ யார்க் டைம்' ஸின் பெல்கிரேட் நிருபர் தெரிவித்திருக்கிறார்.

---

### இந்தோ—பர்மா வியாபாரப் பேச்சு

பர்மா வியாபார மெம்பர் யு பா தான்; டின் டட் இருவரும் புது டில்லி வந்து சேர்ந்துவிட்டனர். 25வ பிற்பகல் இந்தோ-பர்மா வியாபாரப் பேச்சுகள் ஆரம்பமாயின.

---

### ஸ்ரீ பழனியப்ப செட்டியார் பிரிவு

ஸ்ரீ பெரி. க. ப. மெ. பழனியப்ப செட்டியாரவர்கள் பங்குனி 10வ இரவு 11-மணிக்கு இவ்வுலக வாழ்வை நீத்தார்கள். இவர்கட்கு வயது 68. சாந்தகுண முள்ளவர்கள். சில தினங்கட்கு முன்புதான் சுவீகாரம் செய்துகொண்டார்கள்.



## ரயில்வே ஹோட்டல்களில் சாதிபேத ஒழிப்பு

### தென் இந்திய ரயில்வேயிலும் அமுலுக்கு வந்தது

ரயில்வேக் கம்பெனிகளின் நிர்வாகத்திலிருக்கும் ஹோட்டல்கள், சிற்றுண்டிச் சாலைகளில் பிராமணருக்கு என்றும், பிராமணரல்லாதாருக்கென்றும் தனித் தனி இடங்கள் ஒதுக்கப்பட்டிருப்பதையும், அவற்றைக் குறிக்கும் போர்டுகளையும் நீக்கி ஒரே போஜன இடத்தை அமைக்கும்படி ரயில்வே போர்டார் உத்தரவிட்டதும், அதற்கிணங்கி எம். எஸ். எம். ரயில்வே கம்பெனியார் பிப்ரவரி 8-ந்தேதி முதலே இந்த உத்தரவை அமுலுக்குக் கொண்டு வந்ததும் மாசி 16-ந் தேதி வெளியான 'குமர'னில் வெளியிடப்பட்டிருக்கின்றன. தென் இந்திய ரயில்வேக் கம்பெனியார் மட்டும் ஏதேதோ காரணங்கள் சொல்லிக் காலங்கடத்தினர். ஆனால் மார்ச் 20-ந் தேதி முதல் தென் இந்திய ரயில்வேயிலும் மேற்கண்ட உத்தரவு அமுலுக்கு வந்து விட்டது. ரயில்வே ஸ்டேஷன்களிலுள்ள சிற்றுண்டிச்சாலைகளில் தனித்தனி யெழுதி மாட்டப்பட்டிருந்த போர்டுகள் அன்று எடுக்கப்பட்டுவிட்டன. ஜஸ்டிஸ் கட்சித் தலைவர் திரு. ஈ. வே. ராமசாமிப் பெரியார் அவர்களது மிகுந்த முயற்சியும், கிளர்ச்சியுமே இதன் காரணமாகும்.

---

### ஸ்ரீ அபிசீனியா நாச்சியப்பன்

மாசி 18-ம் தேதி நாகபட்டினத்திலிருந்து புறப்பட்டு 22-ம் தேதி பினங்கு சேர்ந்து, 25ம் தேதி ஈப்போ சுகமாய்ப் போய்ச் சேர்ந்துவிட்டதாகவும், கப்பலும் கடல் பிரயாணமும் சுகமாக இருந்ததாயும் ஸ்ரீ அபிசீனியா நாச்சியப்பன் அறிவிக்கிறார்.

---

### பர்மிய தேசியக்கொடி

பர்மிய தேசியக் கொடி புதிதாக மார்ச்சு 31ந் தேதி முதல் அமுலுக்கு வரும். அதில் மயில் ஒன்றின் உருவம் இருக்கும். சுயவாட்சி பெற்ற குடியேற்ற நாடுகளுக்குள்ளதைப் போன்ற ஒரு கொடி பர்மாவுக்கும் ஏற்பாடு செய்யப்பட்டிருக்கிறது.

---

### சிவகெங்கையில் காங்கிரஸ் கூட்டம்

18-3-41ல் ராமநாதபுரம் ஜில்லாக் காங்கிரஸ் கமிட்டித் தலைவர் திரு. ஆர். ராமானுஜம் அய்யங்கார் தலைமையில் நடைபெற்ற கூட்டத்தில் ராமநாதபுரம் காங்கிரஸ் கமிட்டிக் காரியதரிசி திரு. R. கிருஷ்ணசாமி நாயுடு காங்கிரசை எல்லோரும் ஆதரிக்கும்படி கேட்டுக்கொண்டார்.

---

### கிரீஸ்மீது படையெடுக்க

#### ஜர்மன் துருப்புகள் செல்கின்றன

பல ஜர்மன் படைகள் பல்கேரியா வழியாகக் கிரேக்க எல்லையை நோக்கிப் போய்க்கொண்டிருக்கின்றனவாம்.

---

### பேர்லின்மீது குண்டு வீச்சு

சென்ற ஞாயிற்றுக்கிழமை இரவு பிரிட்டிஷ் வெடி குண்டு விமானங்கள் பேர்லின் மீது 10,000 எரி வெடிகளைப்பொழிந்தன. தொழிற்சாலைகளும், பண்டகசாலைகளும் சேதமுற்றன. கீலிலுள்ள கப்பற்படைத்தளமும், முக்கிய ரயில்வே ஜங்ஷனும் ஹானோவரும் தாக்குண்டன.

---

### அபிஸீனியாவில் பிரிட்டிஷார் வெற்றி

இப்பொழுது பிரிட்டிஷ் சோமாலிலாந்து முழுமையும் பிரிட்டிஷ் ஆதிக்கத்திற்குள்ளாகிவிட்டதாக ஒரு அறிக்கை வெளியாகியிருக்கிறது.

---

### இராக்ஷசக் கப்பல்கள்

பஸிபிக், அட்லாண்டிக் ஆகிய இரு சமுத்திரங்களிலும் அமெரிக்கா தன் கடற்படைகளை வலுப்படுத்தும் பொருட்டு 8620 லக்ஷம் டாலர் ஒதுக்கிவைப்பதென்ற மசோதா 21-வ ஸெனேட் சபையில் நிறைவேறியது. புதிதாக நிர்மாணிக்கப்படும் ஐந்து யுத்தக் கப்பல்களின் நிறை 60,000-த்தி லிருந்து 65,000 டன்வரை இருக்கும் என்று 21-வ பிரதிநிதிகள் சபையில் கடற்படை நிபுணர்கள் தெரிவித்தனர். எனவே அவை உலகிலேயே மிகவும் பெரிய யுத்தக் கப்பல்களாக இருக்கும்.



இ. வே. ராமசாமிப் பெரியார்

## டாக்காவில் வகுப்புக் கலகம்

### 28 பேர் மாண்டனர்: 157 பேருக்குக் காயம்

மார்ச் 20வ முதல் வங்காளத்தில் டாக்கா, குல்னு முதலிய இடங்களிலும், அவற்றை யடுத்துள்ள பிரதேசங்களிலும் முஸ்லிம்களுக்கும் ஹிந்துக்களுக்குமிடையே கடுமையான கலகம் ஏற்பட்டிருக்கிறது. இருதாரத்தினருக்கும் சொந்தமான நூற்றுக்கணக்கான வீடுகளும் பல பெரிய கடைகளும் தீக்கிரையாக்கப்பட்டன. போலீசார் கலகத்தை யடக்கத் துப்பாக்கிப் பிரயோகம் செய்யவேண்டியிருந்ததினால் பலர் காயமடைந்தனர். டாக்காவில் ராணுவப் பாரா ஏற்படுத்தப்பட்டுள்ளது. ஊரடங்குச் சட்ட அமுலும் பிறப்பிக்கப்பட்டுள்ளது. வகுப்பு சமரச மேற்படுத்தப் பல கட்சிகளும் பெரு முயற்சி செய்து வருகின்றன. ஒரு கள்ளுக்கடையில் சில இந்துக்களுக்கும், முஸ்லிம்களுக்கும் ஏற்பட்ட ஒரு சிறு தகரார் ஊர் முழுவதும் பரவியதால்தான் இக்கலகம் தோன்றியதாம்.

இப்போது நிலைமை அபிவிருத்தி அடைந்திருப்பதாயும் மூடப்பட்ட கடைகள் திறக்கப்படுவதாயும் வங்கப் பிரதம மந்திரி சட்ட சபையில் தெரிவித்திருக்கிறார். கடைசியாகக் கிடைத்த செய்தியிலிருந்து மொத்தம் 28 பேர் மாண்டதாயும் 157 பேர் காயமுற்றதாயும் தெரிகிறது. இறந்தவரில் 21 பேர் முஸ்லிம்கள். இதுவரை மொத்தம் 234 பேர் கைது செய்யப்பட்டிருக்கின்றனர். (இந்துக்கள் 157; முஸ்லிம்கள் 77) சமாதானம் ஏற்படுத்தத் தக்க நடவடிக்கைகள் எடுக்கப்பட்டு வருகின்றன.

---

### மதுவிலக்குச் சட்டம்

#### இந்திய சர்க்காருடன் கடிதப் போக்குவரத்து

மதுவிலக்குச் சட்டம் சம்பந்தமாக சமீபத்தில் ஹைகோர்ட் எடுத்துக் காட்டிய குறையை நிவர்த்திப்பதற்காக ஆப்காரிச் சட்டத்தில் திருத்தம் செய்வது முதலான ஏற்பாடுகளைச் செய்ய சென்னை சர்க்கார் ராஜப்பிரதிநிதியின் அங்கீகாரத்தைப் பெற இந்திய சர்க்காருடன் கடிதப் போக்குவரத்து நடத்தி வருவதாகத் தெரிகிறது.

---

### பத்ராசலத்தில் ஸ்ரீராம நவமி

கீழக்கோதாவரி ஏஜென்ஸி பிரதேசத்திலுள்ள பத்ராசலத்தில் ஏப்ரல் 1-ந் தேதி முதல் 10-ந்தேதி வரையில் ஸ்ரீராம நவமி உற்சவம் நடக்கும். அங்கே பக்கத்து ஜில்லாக்களில் காலராவிருப்பதால் யாத்ரீகர்கள் அங்கு போகு முன் இனகுலேஷன் செய்து கொள்ளவேண்டும் என்று சென்னை சர்க்கார் அறிக்கை கூறுகிறது.

## டில்லியில் வர்த்தகர்கள் மகாநாடு

### வெளிநாட்டு இந்தியர்பற்றி குமார ராஜா தீர்மானம்

இந்திய வியாபாரச் சம்மேளனத்தின் 14-வது வருஷக் கூட்டம் மார்ச் 22-வ டில்லியில் ஸ்ரீ அமிர்தலால் ஓஜ்கா தலைமையில் கூடியது. யுத்தத்துக்கு அவசியமானவை மட்டுமின்றி, நாட்டின் தேவைக்கு அவசியமான இதர தொழில்களுக்குப் பாதுகாப்பு அளிக்கும் விஷயத்தில் சர்க்கார் திட்டமான கொள்கையை வகுக்க வேண்டு மென்றும், இதுவரை அனுஷ்டிக்கப்பட்டுவந்த, காலங்கடத்தும் கொள்கை கைவிடப்பட வேண்டு மென்றும் ஓர் தீர்மானம் நிறைவேறியது. கம்பெனிகளின் நிர்வாகத்தி லிருக்கும் ரயில்வேக்களை சர்க்கார் வாங்கிவிடவேண்டுமென்றும், ஏற்றுமதி ஸ்தாபனம் ஒன்று ஏற்படுத்தப்பட வேண்டுமென்றும், மற்றிரு தீர்மானங்கள் நிறைவேறின.

#### வெளிநாட்டு இந்தியர்

இந்திய—இலங்கைச் சமரசப் பேச்சு சம்பந்தமாக இந்திய சர்க்கார் உறுதியான மனோபாவத்துடனிருப்பதைப் போற்றுவதாயும், இனியேனும் இலங்கை ராஜாங்க சபை தன் மனோபாவத்தை மாற்றி மசோதாக்களை விட்டுவிடுமென நம்புவதாயும் இந்தியாவுக்கும் பர்மாவுக்கு மிடையே நடந்துவரும் வர்த்தகப் பேச்சு வார்த்தைகளில் பர்மாவிலுள்ள இந்தியரின் நன்மைகளையும் உரிமைகளையும், அந்தஸ்தையும் பாதுகாக்க இந்திய சர்க்கார் போதிய நடவடிக்கை யெடுத்துக்கொள்வரென்று நம்புவதாயும் செட்டிநாடு குமார ராஜா பிரேரித்த தீர்மானமும் நிறைவேறியது. அவர் பர்மா வாழ் இந்தியருடைய நிலைமையை விளக்கிப் பேசினர்.

மத்தியில் தேசிய சர்க்காரை அமைத்து உடனே நெருக்கடியைத் தீர்த்துவைக்க வேண்டுமென்றும், இதர ராஜீயப் பிரச்னைகளை அப்பால் முடிவு செய்து கொள்ளலாமென்றும் மறுநாள் கூட்டத்தில் தீர்மானிக்கப்பட்டது.

---

### வெயில் கொடுமை.

#### இவ்வருஷத்திய முதல் பலி

டோல்பூர், மார்ச் 21

இவ்வருஷ வெயில் கொடுமை முதல் பலி வாங்கிவிட்டது. மனியா என்ற கிராமத்தில் ஆடுகளை மேய்த்துக்கொண்டிருந்த இடையன் ஒருவன் வெயில் தாங்காமல் கீழே விழுந்து மாண்டுவிட்டதாக இங்கு செய்தி கிடைத்திருக்கிறது. நேற்று முதல் இங்கும் சுற்றியுள்ள இடங்களிலும் 103 டிகிரி வெயில்.

---

வேலூரில் இதுவரை மொத்தம் 8 பேர்களுக்கு பிளேக் கண்டிருக்கிறது. 5 பேர்கள் இறந்துவிட்டனர். 12,000 பேர்கட்கு மேல் இனகுலேஷன் செய்யப்பட்டிருக்கின்றனர்.

## தந்திச் செய்தி

### ரெங்கூன் மார்க்கெட்

ரங்கூன், மார்ச் 26வ

| | |
|---|---|
| பட்டு நெல் | 127/129 |
| மீடோன் நெல் | 134/136 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 375/380 |
| மில்சார் புரோம் | 320/325 |
| மில்சார் மாண்டலே | 307/312-8 |
| முழுப் புழுங்கல் | 335 |

(தாமதித்துக் கிடைத்த தந்தி)

ரங்கூன், மார்ச் 19வ

| | |
|---|---|
| ஙசேன் நெல் | 126/128 |
| மீடோன் நெல். | 131/133 |
| சுகந்தி வெள்ளை அரிசி | 360/365 |
| மில்சார் புரோம் | 320/326 |
| மில்சார் மாண்டலே | 307-8/312-8 |
| முழுப் புழுங்கல் | 327-8/330-8 |

---

### லண்டன் ரப்பர்

லண்டன்; மார்ச் 24வ

ரப்பர் ராத்தல் ஒன்றுக்கு 14½ பென்ஸ்.

---

### சிங்கப்பூர் ரப்பர்

சிங்கப்பூர், மார்ச். 22வ

ரப்பர் பிக்கல் ஒன்றுக்கு 51 வெள்ளி 17 காசு

---

### கொழும்பு ரப்பர்

கொழும்பு, மார்ச். 25வ

| | |
|---|---|
| கிரேப் ரப்பர் | 56¾ சதம் |
| ஷீட் ,, | 56¾ ,, |

### கொப்பரா

| | |
|---|---|
| முதல் தரம் | ரூ. 34 |

---

### சென்னை மார்க்கெட்

சென்னை, மார்ச். 25வ

| | | | |
|---|---|---|---|
| சவரன் (மொத்த விலை) | 29 | 10 | 6 |
| சவரன் (சில்லறையில்) | 29 | 11 | 0 |
| முசை தோலா 1க்கு | 43 | 2 | 0 |
| வெள்ளி ரெடி 100 தோலா | 64 | 8 | 0 |
| வெள்ளி ரூபாய் எடை | 0 | 10 | 6 |

---

## சிவகெங்கைச் செய்திகள்

(நமது நிருபர்)

### மரணதண்டனை ரத்து

17-8-40 இளையாங்குடி இப்ராஹீம் ராவுத்தர் தன்னுடைய சிற்றப்பன் மகனை முகம்மது ராவுத்தரைக் கொலை செய்த குற்றத்திற்காக இராமனாதபுரம் செஷன்ஸ் ஜட்ஜ் டி இப்ராஹீம் ராவுத்தருக்கு மரண தண்டனை விதித்திருந்தார். சென்னை ஹைகோர்ட்டார் டி மரண தண்டனையை ரத்துசெய்து தீவாந்தர சிக்ஷையாக மாற்றியிருக்கின்றனர்.

### உத்தியோக மாற்றம்

திருப்பத்தூர் அடிஷனல் மாஜிஸ்திரேட் ஸ்ரீ அம்பலவாண பிள்ளையை விருதுநகருக்கு சப் மாஜிஸ்திரேட்டாகப் பதவி வகிக்கும்படியாயும், விருதுநகர் சப் மாஜிஸ்திரேட் ஸ்ரீ நாராயண அய்யங்காரை திருப்பத்தூர் அடிஷனல் மாஜிஸ்திரேட்டாகப் பதவி வகிக்கும்படியாயும் உத்தரவாகி யிருக்கிறது.

### வழிப்பறி செய்ததாக

மானாமதுரை போலீஸ் சரகத்தைச் சேர்ந்த அருங்குளம் கிராமத்து குப்புத்தேவன், வெங்குத் தேவன் ஆகிய எதிரிகள் 22-9-40 மாலை 4½ மணி சுமாருக்கு பார்த்திபனூர்—பரமக்குடி ரோட்டில் சோப்பு வியாபாரம் செய்துவந்த ராமன் நாயர் வகையறா 4 வியாபாரிகள் கொண்டுவந்த 40 சொச்ச ரூபாயை அரிவாள் கம்பு சகிதம் தாக்கிப் பணத்தை வழிப்பறி செய்ததாக ஏற்பட்ட வழக்கில் ஜூரிகளின் ஏகோபித்த அபிப்பிராயத்தின் பேரில் ஸ்ரீ எஸ். நீலகண்ட சாஸ்திரிகள் (சிவகங்கை அஸிஸ்டண்ட் செஷன்ஸ் ஜட்ஜ்) 1-வது எதிரிக்கு 7 வருஷக் கடுங்காவலும், 2, 3 வது எதிரிகளுக்கு தலா 3 வருஷக் கடுங்காவலும் அனுபவிக்கும்படியாய் 21-3-41ல் தீர்ப்புக்கூறினார்கள். கவர்ன்மெண்டு சார்பாக (பப்ளிக் பிராஸிகியூட்டர்) ஸ்ரீ எஸ். கிருஷ்ணஸாமி பிள்ளையும் எதிரிகளுக்கு திரு. எஸ். சூர்யநாராயண சர்மாவும் ஆஜரானார்கள்.

## தந்தச் சாமான்களுக்கு இலங்கையில் தடை

தந்தச் சாமான்களை இறக்குமதி செய்யக் கூடாதென்று இலங்கை சர்க்கார் தடை விதித்திருக்கின்றனர். இதனால் திருவிதாங்கூர் தந்தத் தொழிலாளிகளுக்கு அதிக பாதகம் ஏற்பட்டிருக்கிறது. திருவிதாங்கூரிலிருந்து இலங்கைக்குத் தான் ஏராளமான தந்தச் சாமான்கள் ஏற்றுமதி செய்யப்பட்டு வந்தன.

---

### அந்நிய பாஷைகள் தெரிந்தால் யுத்தத்தில் உதவலாம்

இந்தியாவின் யுத்த முயற்சியில் தங்களாலானதைச் செய்ய, அன்னிய பாஷை தெரிந்தவர்களுக்கு ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருக்கிறது.

இத்தாலிய பாஷை, ருமேனிய பாஷை, அல்பேனிய பாஷை முதலிய பதினொரு ஐரோப்பிய பாஷைகளில் ஒன்றோ பலவோ தெரிந்திருப்பவர்களும், தாய்லாந்து பாஷை, ஜாவானிஸ் பாஷை, மலேய பாஷை, மால்டிவிய பாஷை, ஜப்பானிய பாஷை, பெர்சிய பாஷை, ஆன்னமீஸ் பாஷை, மாப்லா பாஷை, பர்மிய பாஷை முதலிய பனிரெண்டில் ஒன்றோ பலவோ அறிந்தவர்களும் தாங்களாக இந்திய கவர்ன்மெண்டாரிடம் பதிவு செய்துகொள்வதற்கான திட்டமொன்றை ஏற்படுத்த உள்நாட்டு இலாகாவைச் சேர்ந்த ஆள் பலப் பிரிவில் தீர்மானித்திருப்பதாகத் தெரிகிறது.

---

### இந்தியாவில் இத்தாலியக் கைதிகள்

இந்தியாவில் மொத்தம் 44,000 இத்தாலியக் கைதிகளைப் பந்தோபஸ்தில் வைத்திருக்க இந்திய சர்க்கார் ஒப்புக்கொண்டிருக்கிறார்கள். இது வரை 30,000 கைதிகள் இங்கு இருந்துவருகிறார்கள். ராம்கார், பங்களூர் ஆகிய இரு இடங்களிலும் முகாம்கள் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. போபாலில் மற்றொரு முகாம் அமைக்க ஏற்பாடாகிறது. கைதிகள் சம்பந்தப்பட்ட செலவுகள் முழுவதும் பிரிட்டிஷ் சர்க்கார் பொறுப்பாகும்.

---

### மூவருக்குச் சிறைத் தண்டனை

அழகர் குடும்பனை வழிமறித்து, வேல்கம்பு, அரிவாள் முதலியவற்றால் தாக்கிக் காயப்படுத்தியதாகக் குற்றஞ் சாட்டப்பட்ட தேவர்னரி சோலைக் குடும்பனுக்கு 18 மாதக் கடுங்காவலும், ஷையூர் கும்மக் குடும்பன், சமயக் குடும்பன் இவர்களுக்குத் தலா 8 மாதக் கடுங்காவலும் ராமநாதபுரம் ஜாயின்று மாஜிஸ்திரேட் ஸ்ரீ உஸ்மான் அலியால் விதிக்கப்பட்டிருக்கின்றன.

---

### சினிமா ஆப்ரேடர் பரீட்சை போர்டு

சினிமா ஆபரேடர்களைப் பரீக்ஷித்து, ஸர்டிபிகட்டுகள் வழங்க சென்னை சர்க்கார் ஒரு போர்டை நியமித்திருக்கின்றனர். இந்த போர்டுக்கு சர்க்கார் எலக்டிரிக்கல் எஞ்சினீயர் தலைவர். மெம்பர்கள்: ஸ்ரீ புல்லையா (சென்னை மினர்வா டாக்கீஸ் சொந்தக்காரர்), திரு. டி. டெஹ்ரானி (நியூடோன் ஸ்டுடியோ ஸவுண்ட் எஞ்சினியர்), திரு. பி. என். ரெட்டி (வாஹினிபிக்சர்ஸ் டைரக்டர்) திரு. இ. ஐ. ஜீவரத்னம் (ஸவுண்ட் எஞ்சினியர், வேல் பிக்சர்ஸ்).



## ராமநாதபுரம் ஜில்லா போர்டு

### புது வருட வரவு செலவுத் திட்டம்

மார்ச் 17வ மதுரையில் தலைவர் ஸ்ரீ ஜயராம் நாயுடு தலைமையில் கூடிய ராமநாதபுரம் ஜில்லா போர்டுக் கூட்டத்தில், 1940-41ம் வருடத்திய திருத்திய பட்ஜட்டும், 1941—42ம் வருடத்திய பட்ஜட் திட்டமும் அங்கீகரிக்கப்பட்டன.

பொது சுகாதார இனத்துக்குரிய செலவைக் குறைத்து, ரோடுகள் பராமரிப்புக்கு அதிகத் தொகை ஒதுக்கப்பட்டிருக்கிறது. பிரசவ சிசு சம்ரட்சணை சாலைகள் எட்டையும் எடுத்து விடவும் தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. எரியூர் கிராம வைத்திய சாலை ஒழுங்கான வைத்திய சாலையாக மாற்றப்பட்டது. இந்த வைத்தியசாலைக்கு ஸ்ரீ ஏ. வி. ஆர். வி. வீரப்ப செட்டியார் கட்டிடம் கட்டி உதவ ஒப்புக் கொண்டிருக்கிறார்.

ஆரம்பக் கல்விக்குரிய மான்யம் 50,100 ரூபாயிலிருந்து 60,000 ஆக உயர்த்தப்பட்டது. வாடகைக் கட்டிடங்களில் நடைபெறும் பள்ளிக்கூடக் கட்டிட சொந்தக்காரர்களை, வாடகையில் 10 சதமானத்தைக் குறைத்துக் கொள்ளுமாறு கேட்கத் தீர்மானிக்கப்பட்டது. ஏப்ரல் முதல் தேதியிலிருந்து தங்கள் பிரயாணப்படித் தொகையில் 25 சதமானம் குறைத்துக் கொள்ள ஜில்லா போர்டு மெம்பர்கள் ஒப்புக் கொண்டிருக்கின்றனர்.

மாஜி யூனியன் போர்டுகளின் ஆதிக்கத்திலிருந்து வந்த எலிமெண்டரிப் பாட சாலைகளை (பஞ்சாயத்துப் பிரதேசங்களில்) தற்காலச் செல்வ நிலையை உத்தேசித்து மூடிவிட ஜில்லா போர்டு தீர்மானிப்பதாயும், தங்கள் செலவில் நடத்தப் பஞ்சாயத்து போர்டுகள் தீர்மானித்தால், கட்டிடங்களையும் தளவாடச் சாமான்களையும் கொடுத்து உதவத் தயாராயிருப்பதாயும் தீர்மானிக்கப்பட்டது.

அங்கீகாரம் ரத்து செய்யப்பட்ட சகல பள்ளிக் கூடங்களையும், சென்ற ஆறு மாத காலத்தில் சராசரி தினமும் 20 பிள்ளைகள் கூட ஆஜரில்லாத பள்ளிக் கூடங்களையும் மூடிவிட வேண்டுமென்று பட்ஜட் திட்டக் கமிட்டி சிபார்சு செய்திருந்தது. ஆதிதிராவிடர்களுக்கும், இந்துக்களுக்கும் தனித் தனி பள்ளிக் கூடங்கள் ஒரே இடத்தில் இருந்தால், இரண்டையும் இணைத்துவிடவும் தீர்மானிக்கப்பட்டது.

### ரோடுகளின் நிலைமைபற்றி சர்க்கார் அதிருப்தி

ராமநாதபுரம் ஜில்லா 'போர்டின் 1939-40ம் வருடத்திய நிர்வாக அறிக்கைக் குறிப்புகளும், அவைபற்றிய சர்க்கார் அபிப்பிராயமும் வெளியாகி யிருக்கின்றன.

இவ்வருடம் மோட்டார் பஸ் லைசன்ஸ் கட்டணத்திலிருந்து கிடைத்த வருமானம் ரூ 1,25,308. மோட்டார் வாகன வரிச் சட்டத்தின்படி சர்க்காரிடமிருந்து கிடைத்த மான்யம் ரூ 2,18,086. பாலம் கட்டுதல், பழுது பார்த்தல் முதலிய இனங்களில் செலவு ரூ 64,208.

பையன்களுக்காக 606 பள்ளிக்கூடங்களும், பெண்களுக்காக 123 பள்ளிக்கூடங்களும் நடத்தப்பட்டன. பள்ளிக்கூடம் செல்லாத பையன்களின் விகிதம் 43 சதமானம்; பெண்கள் 80 சதமானம். (இவை சென்ற வருடம் முறையே 42 ஆகவும் 80 ஆகவும் இருந்தன). தாழ்த்தப்பட்ட, ஒதுக்கப்பட்ட வகுப்பு மாணவர்கட்காக ஏற்பட்ட பள்ளிக்கூடங்கள் 11. படித்த பையன்கள் தொகை 38,030; பெண்கள் 7,552. ஆசிரியர்கள் தொகை 1,245. ஒவ்வொரு மாணவனுக்கும் ஏற்பட்ட சராசரிச் செலவு ரூ 8—14—8. 1000க்கு ஜனன விகிதம் 36; மரண விகிதம் 21·5. காலராவால் மாண்டவர் 2; வைசூரியால் மாண்டவர் 15.

முக்கியமான ரோடுகளின் நிலைமை திருப்திகரமாயில்லை யென்றும் குண்டு குழிகள் நிரம்பியிருப்பதாயும் கலக்டர் தெரிவித்திருக்கிறார். எனவே இது சம்பந்தமாகவுள்ள தங்கள் அதிருப்தியைத் தெரிவிக்க, சர்க்கார் ரோடுகளுக்குரிய தங்கள் மான்யத்தில் 1000 ரூபாயைக் குறைத்திருக்கின்றனர். பள்ளிக்கூடம் செல்லும் வயதுடைய பையன்களின் 43 சதமானம் பேர்களும், பெண்களில் 80 சதமானம் பேரும் பள்ளிக்கூடம் செல்லாதது அதிருப்திகரமாயிருப்பதாயும், இன்னும் அதிகப்படியான பள்ளிக்கூடங்களை ஏற்படுத்தி ஜாஸ்தி பிள்ளைகள் படிக்கும்படி செய்ய வேண்டுமென்றும் சர்க்கார் தெரிவித்திருக்கின்றனர்.





### புதுக்கோட்டை நகர சபை

#### உத்யோகப் பற்றற்ற தலைவர் நியமனம்

புதுக்கோட்டை நகர சபை ஏற்பட்டு 25 வருஷங்களுக்கு மேலாகின்றன; இப்போது தான் ஒரு உத்யோகப் பற்றற்றவர் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். இது வரை தலைவராயிருந்து வந்த அதிகாரி ஸ்ரீ ராமச்சந்திர ஐயர் இரண்டு மாத ரஜாவில் சென்றிருக்கிறபடியால் அவரது ஸ்தானத்தில் சட்டசபை மெம்பர் ஸ்ரீ வி. வெங்கோபராவ் நகரசபைத் தலைவராக நியமிக்கப்பட்டிருக்கிறார். ஏற்கனவே, தேர்தல் மூலம் தலைவரை நியமிக்க வேண்டுமென்று சட்டசபை தீர்மானித்து, அவ்விஷயம் சர்க்காரால் அங்கீகரிக்கப்பட்டு, தனிக் கமிட்டியின் பரிசீலனையிலிருந்து வருகிறது.

---

ஆட்சேபனைகளைக் கிளப்பித் தான் மனித இனம் உயர இயன்றது. தைரியமுள்ளவர்கள் துணிந்து பேச வேண்டும், அடுத்தடுத்துப் பேசவேண்டும்.—'திபியன்





## வெள்ளாட்டுப் பால்

வெள்ளாட்டைப்பற்றி நல்லதும் சொல்லலாம், கெட்டதும் சொல்லலாம்.

கெட்டதை ஏற்கனவே சொல்லிவிட்டார் கார்ல் வோகட். வெள்ளாட்டைக் கடவுள் சிருஷ்டிக்கவில்லை, பேய் சிருஷ்டித்தது என்ற கதை சரிதான் என்று அவர் சாதிக்கிறார். அவர் சொல்லுகிறார்—"வெள்ளாட்டுக்கு அழிக்கத்தான் தெரியும். அதன் வாய்ப்பட்ட இடமெல்லாம் பாழ். காட்டை அழிக்கிற கைங்கரியத்திலே அதற்கு மிஞ்சின மிருகம் கிடையாது. ஏன், காட்டை மட்டுமா, எத்தனை நாடு நாகரிகங்களை அது அழித்திருக்கிறது! மத்திய தரைக் கடலைச் சுற்றியுள்ள தேசங்கள் ஒரு காலத்தில் நாகரிகத்திற்கு இருதய ஸ்தானமாக இருந்தவை, இன்று அவைகளினுடைய காடுகளெல்லாம் அழிந்து கிடக்கின்றன, மலைகள் மொட்டையாக நிற்கின்றன, பூமி வரண்டுவிட்டது; இவ்வளவு பாழும் வெள்ளாடுகள் பண்ணின வேலையே!"

தடிப் போடாய்ப் போட்டுவிட்டார் வோகட்! ஆனால் இந்தத் தடிப் போட்டிலும் கொஞ்சம் உண்மை இல்லாமலில்லை. இந்தியாவிலே மோட்டார் ரோடுகள் வழியாகப் பிரயாணம் பண்ணிப்பார்த்தால் தெரியும். நெடுக ஆடுகள் நின்று மேய்த்துகொண்டிருக்கும். ஆட்டுக்கு எட்டாதது கோனுருக்கு எட்டுகிறது. பிறகு சொல்லவாவேண்டும், நடக்கிற அழிவை! இப்படிக் கணக்கற்ற சாலை விருட்சங்கள் பாழாகின்றன.

இவ்வளவும் கெட்டது. இனி நல்லதைப் பார்ப்போம். இதை உலகறிய எடுத்துச் சொன்னவர் மகாத்மா காந்தி. அவர் பெயரை நினைத்தவுடனேயே அநேகருக்கு வெள்ளாட்டு ஞாபகம் வரும். சேம்பர்லின் என்றவுடனே உங்களுக்கு எப்படிக் குடை ஞாபகம் வருகிறது, அப்படி.

வெள்ளாட்டுப் பால் நல்ல ஆகாரம். ஊட்டம் அளிக்கத் தக்கது. விசேஷமாக ஜீரண சக்தி குறைந்தவர்களுக்கு நல்லது; எளிதில் ஜீரணமாகும். பசுவின் பாலைப் போல வெள்ளாட்டுப் பாலிலிருந்தும் வெண்ணெயும் பாலடைக் கட்டியும் எடுக்கலாம்.

வெள்ளாட்டுப் பாலைக் காய்ச்சிக் குடிப்பது முக்கியம். அதன்மூலம் சில வகைத் தொற்று நோய்கள் பரவ முடியும் என்று ருசுவாகியிருக்கிறது.—ஆகையால் நன்றுகக் காய்ச்சிக் குடிக்க வேண்டும்.

வெள்ளாட்டுக்கு யாரோ 'ஏழைகளின் பசு' என்று பெயர் வைத்திருக்கிறார்கள். அது சரிதான். இந்தப் பசு அநேகமாக ஒவ்வொரு வீட்டிலும் இருக்கலாம். பத்துப் பன்னிரண்டு ரூபா போட்டு ஒரு வெள்ளாடு வாங்கி வளர்ப்பது கஷ்டமல்ல. பால் மிகவும் அவசியமான ஆகாரம். கீழ்க் கண்ட கணக்கு பசுவின் பாலுக்கும் வெள்ளாட்டுப் பாலுக்கு முள்ள வித்தியாசங்களைக் காட்டும்:

| | பசு | வெள்ளாடு |
|---|---|---|
| நீர் | 87·80 | 86·30 |
| திண்மங்கள் | 12·20 | 13·70 |
| கொழுப்பு | 3·40 | 4·00 |
| கேசியின்ம் | 2·70 | 3·60 |
| மொத்த பிசிதம் | 3·40 | 4·60 |
| சர்க்கரை | 4·70 | 4·30 |
| சாம்பல் | 0·7 | 0·8 |
| அவுணத்தில் கனவி விகிதம் | 18 | 20 |

(நல்வழி)

---

பிறர் கூறுவதைக் கேட்பதனால், அவர்கள் கருத்து நமக்கு விளங்கும்; ஆனால் நம் ஆராய்ச்சிதான், நம் அறிவை வளர்க்கும். —திபியன்.

## தீப்பெட்டி வரி உயர்வு

### விலையைக் குறைக்க யோசனை

மார்ச் 22உ இந்திய அஸம்பிளியில் நடைபெற்ற வரி மசோதா விவாதத்தின் போது, கட்சி பேதமின்றிப் பலரும் தீப்பெட்டி வரி உயர்வைத் தாக்கிப் பேசினர். ஒருவர், தீப்பெட்டியிலுள்ள குச்சிகளின் தொகையை 40லிருந்து 50 ஆக உயர்த்த வேண்டுமென்று கூறினர். இதற்கு நிதி மெம்பர் பதிலளிக்கும்போது, தாம் இது பற்றி உற்பத்தியாளருடன் விவாதிக்கப் போவதாயும், அம்மாதிரி மாறுதல் செய்ய சர்க்காருக்கு அதிகாரமிருப்பதாயும், மாறுதலினல் தொழிலுக்குச் சாதகம் ஏற்படுமாஞல் அவ்விதம் செய்ய சர்க்கார் சம்மதிக்க கூடுமென்றும் தெரிவித்தார். அதன் மேல் திருத்தம் வாபஸ் வாங்கப்பட்டது. சர்க்கார் தீர்வையை 2 ரூபாயிலிருந்து, 1, 1—4—0, 1—8—0, 1—12—0 ஆகக் குறைத்து நிர்ணயிக்க வேண்டுமென்று வேறு சில திருத்தங்கள் கொண்டுவரப்பட்டன. 40 குச்சிகள் உள்ள பெட்டியின் விலை 4½ தம்பிடிக்கு அதிகப்படாமலிருக்கும்படி ஏற்பாடு செய்வதாகப் பொக்கிஷ மெம்பர் வாக்களித்தார்.

### குடிசைத் தொழில்

தீப்பெட்டித் தொழிலை ஒரு குடிசைத் தொழிலாக நடத்தும் ஸ்தாபனங்களுக்கு அளிக்கப்படும் உதவித் தொகை (டிஸ்கவுண்ட்)யை இரு மடங்காக்க வேண்டுமென்று டாக்டர் பானர்ஜி கோரினர். அத்தகைய குடிசைத் தொழில் அபிவிருத்திக்கு மார்க்கமில்லையென்றும், அபாயகரமான பொருள்கள் உபயோகிக்கப்படுவதால் குடிசைத் தொழிலாக நடத்தத் தகுதியற்றதென்றும் வரி போர்டார் கூறியிருப்பது எடுத்துக்காட்டப்பட்டது. அவ்வாறு நடத்தப்படும் இடங்களில், கூலி, வேலைத் திறமை, தீக்குச்சு எல்லாம் மோசமாயிருப்பதாயும், ஏதேனும் உதவி செய்தால் அது ஏழைத் தொழிலாளர்க்குச் சேராமல் சோத்தகாத ஒரு வகுப்பினருக்குப் போய்ச் சேருமென்றும் சர்க்கார் தரப்பில் தெரிவிக்கப்பட்டதன் மேல் திருத்தம் நிராகரிக்கப்பட்டது.

டம்பம் குறைந்தால் புகழ் உயரும். தற்பெருமை யழிந்தால்தான் கண்ணியம் பெருகும். —திபியன்.

## "ஹிட்லரின் தலை வேண்டும்"

★

### ஜெர்மன் பிரதிநிதியிடம் டச்சுக்காரன் கோரிக்கை

ஹாலந்திலுள்ள ஜெர்மன் கமிஷனரான ஸெய்ஸ் இன்க்வார்ட் காயமுண்ட டச்சுக்காரர்களைச் சென்று பார்த்தபோது ஏதாவது வேண்டுமா என்று அவர்களைக் கேட்டார். உடனே அங்கு காயமுண்டு கிடந்தவர்களில் ஒருவன் சொன்னன்: "ஆமாம், வேண்டும், ஹிட்லரின் தலையை ஒரு தட்டில் வைத்துக்கொண்டு வாருங்கள்" என்று.

ஸெய்ஸ் இன்க்வார்டுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது. ஆனல் அதை அடக்கிக்கொண்டு "ஐயோ, அது ஆபத்தான கோரிக்கையாயிற்றே, அப்பா" என்று சொல்லிக்கொண்டே அந்தப் படுக்கையைத் தாண்டிச் சென்ருர். தலை கேட்டவன் சும்மா இருக்கவில்லை. "ஆபத்தா! எனக்கில்லை" என்று தன் போர்வையை இழுத்தெறிந்தான். அவனுடைய கால்களிரண்டும் வெட்டப்பட்டுக் கிடந்தது தெரிந்தது. ஸெய்ஸ் இன்க்வார்ட் வாயைத் திறக்காமல் அவனை விட்டுச் சென்ருர்.



லண்டனில், எதிரி விமானங்களின் குண்டு வீச்சால் கஷ்டமுற்றவர்களை பிரிட்டிஷ் மன்னரும், மகாராணியாரும் சந்தித்து ஆறுதல் கூறும் காக்ஷி.

## ஜெர்மனியில் இந்தியக் கைதிகள்

### ரெட் க்ராஸ் ஸ்தாபனம் அனுப்பும் உணவுப் பொருள்கள்

ஜெர்மனியில் இந்திய யுத்தக் கைதிகள் எத்தனை பேர் இருக்கிறார்கள் என்பதற்கு சர்க்கார் கணக்கு ஒன்றும் இன்னும் கிடைக்கவில்லை. ஆனல் சுமார் 300 பேர் இருக்கலாமென்று தெரியவருகிறது. பிரிட்டிஷ் ரெட் க்ராஸ் ஸ்தாபனத்தின் ஆதரவில் சார்லிவுட் என்னுமிடத்தில் ஸ்ரீமதி டால்ரிம்பின் என்பவர் உணவுப் பொருள்களை அனுப்புவதற்கு ஒரு ஸ்தலம் ஏற்படுத்தியிருக்கிருர். இங்கிருந்து டப்பியிலடைத்த காய் கறிகளும், நெய், கோதுமை மாவு, மசாலைச் சாமான்கள் பருப்பு, சர்க்கரை, சோப்பு, தேயிலை முதலிய வேறு பல சாமான்களும் அந்தக் கைதிகளுக்கு அனுப்பப்படுகின்றன.

## உருளைக் கிழங்கு இறக்குமதி

### வருஷத்தில் 33 லட்ச ரூபா

ஒவ்வொரு வருஷமும் 33 லட்சம் ரூபாய்க்கு மேல் பெறுமதியுள்ள 11½ லட்சம் மணங்குக்கு மேல் இந்தியா உருளைக் கிழங்கை இறக்குமதி செய்து வருகிறது. இதில் கிட்டத்தட்ட முக்கால் வாசி பர்மாவிலிருந்துதான் இறக்குமதியாகிறது. யுத்தத்துக்கு முன் இத்தாலியிலிருந்து விதைக் கிழங்குகள் சுமார் 20 சதமானமும் கென்யாவிலிருந்து 5 சதமானமும் இறக்குமதியாகி வந்தன. உள்நாட்டு விளைவு காலத்தில் இறக்குமதி குறைவு; இதனல் போட்டி அதிகமில்லை. உள்நாட்டு உற்பத்தியை அதிகரிக்கும்படி இந்திய விவசாய மார்க்கட்டிங் ஆலோசகர் தமது அறிக்கையில் குறிப்பிட்டிருக்கிருர். வருஷத்தோறும் இந்தியாவிலிருந்து 94,000 மணங்கு கிழங்கு (2,81,000 ரூ) இலங்கை, பாஹ்ரீன் தீவு, இராக் முதலிய இடங்கட்கு ஏற்றுமதியாகிறது. இது பெரும்பாலும் மைசூர், சென்னை, பம்பாய், சிந்துப் பிரதேசங்களில் விளைவது. பர்மாவிலிருந்து ஏற்றுமதியாகும் கிழங்கில் பெரும்பாகமும் இந்தியாவுக்கே வருகின்றது.

### பெட்ரோல் பகிர்ந்தளிப்பு

மார்ச் 1உ முதல் மலேயா முழுவதும் பெட்ரோல் பகிர்ந்தளிக்கும் முறை அமுலுக்கு வந்திருக்கிறது. ஒவ்வொரு வண்டிக்கும், அதன் குதிரை பவருக்கு ஏற்றபடி பெட்ரோல் அளந்து கொடுக்கப்படும். 2 காலன் அளவுக்கு மஞ்சள் கூப்பன்களும் 1 காலனுக்கு பச்சைக் கூப்பன்களும் ஒவ்வொரு மாதமும் கொடுக்கப்படுகின்றன.

### சினிமா நிபுணர் நியமனம்

செய்திப் படங்கள் தயாரிப்பதற்கு இந்திய சர்க்கார் மிஸ்டர் அலக்ஸாண்டர் ஷாவை 1940 அக்டோபர் முதல் ஒரு வருஷத்திற்கு நியமித்திருக்கின்றனர். வருஷம் 1000 பவுன் சம்பளம். இந்தியாவிலிருக்கும்போது மாதம் 700 ரூ. அலவன்ஸும் உண்டு. இந்தச் செலவுகளுக்கு பிரிட்டிஷ் சர்க்கார் உதவி செய்கின்றனர். இதே சம்பளத்தை இவர் இங்கிலாந்திலும் பெற்றுக்கொண்டிருந்தார். வாரம் 10 பவுன் வீதம் அலவன்ஸும் அளிக்கப்பட்டது. இவ்விவரங்கள் மத்திய அசம்பிளியில் தெரிவிக்கப்பட்டன.









## அண்ணுமலை நகரில் நகரத்தார் மாணவர் கழகம்

### ஆரம்ப விழா

1-2-41ல் அண்ணுமலைப் பல்கலைக் கழகத்திற் கல்விபயிலும் நகரத்தார் மாணவர்கட்கு, அப்பல்கலைக் கழகத் தமிழ் விரிவுரையாளர் முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் ஒரு சிற்றுண்டி விருந்தளித்து அறிவுரை கூறினர்கள். அன்று பல்கலைக் கழகத் தமிழாசிரியர் பண்டித லெ. ப. கரு. இராமாதஞ் செட்டியாரவர்கள் இங்கே கல்வி பயிலும் நகரத்தார் மாணவர்கட்கெனத் தனியே ஒரு கழக மிருந்தால் நல்லதெனக் கூறினர். அதனை எல்லோரும் ஏற்றுக்கொண்டு மறுநாள் இரவு 7 மணிக்கு பண்டித மணி அவர்கள் தலைமையில் ஒரு கூட்டம் கூடி "அண்ணுமலைப் பல்கலைக் கழகத்து நகரத்தார் மாணவர் கழகம்" என்னும் பெயருடன் ஒரு கழகம் நிறுவினர். கழகத்துத் தலைவர்:—முதுபெரும் புலவர் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள்; உபதலைவர்: பண்டித லெ. ப. கரு. இராமனதஞ் செட்டியாரவர்கள்; அமைச்சர்கள்: திரு. மு. அழகப்பன் (III Hons.), திரு. சா. சுப்பிரமணியன் (II Class.) காரியக் குழுவினர்: திரு. அரு. முத்தமாணிக்கம் (V Hons.), திரு. நா. சுந்தரம் (III Class), திரு. மு. இராமனுதன் (I Class). 21-3-41 மாலை 5 மணிக்கு நிழற்படம் எடுத்தபின்னர் 6 மணிக்குக் கழகக் கட்டிடத்தில் ஷை கழகத்தைக் கோட்டையூர் திரு. அக. அ. சித. அழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் பண்டிதமணி மு. கதிரேசச் செட்டியாரவர்கள் தலைமையில் தொடங்கிவைத்தார். வித்வான் வ. சுப. மாணிக்கம் அவர்கள் (தமிழாராய்ச்சிப் பகுதி மாணவர்) "நம் ஆண் பெண் இருபாலார்க்கும் கட்டாயக் கல்வி பயிற்றுவிக்க, எல்லா ஊர்களிலும் நகரத்தார்கள் வேண்டுவனவற்றைச் செய்ய வேண்டுமென்று இக்கழகம் கேட்டுக்கொள்கின்றது" என்னும் தீர்மானத்தைக் கொண்டுவர திரு. ஆ. வ. இராமனுதன் (III Hons.) அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாய் நிறைவேறியது. "கல்யாணம், புதுமை முதலிய சடங்குகளில் ஆடம்பரச் செலவையும், நாட்களையும் குறைக்க வேண்டும் என்று இக்கழகம் கேட்டுக் கொள்கின்றது" என்னுந் தீர்மானம் திரு. நா. மு. மாணிக்கம் (IV வித்வான்) அவர்களால் கொண்டு வரப்பட்டு திரு. அரு. முத்துமாணிக்கம் (V Hons) அவர்களால் ஆமோதிக்கப்பட்டு ஏகமனதாய் நிறைவேறியது. இத்தீர்மானங்களிரண்டையும் திரு. அக. அ. சித. அழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கள் ஆதரித்துப் பேசிய பின்பு, தலைவர் பண்டித மணி அவர்கள் அவற்றின் இன்றியமையாமையை எடுத்துக் கூறித் தொடங்கி வைத்த திரு. அக. அ. சித. அழ. சிதம்பரஞ் செட்டியாரவர்கட்கு நன்றி கூறினர்கள். இரவு எட்டு மணிக்கு எல்லோருக்கும் விருந்தளிக்கப்பட்டது.

### திருப்பத்தூர்

திருப்பத்தூர் என்.எம். போர்டு ஹைஸ்கூல் மாணவர் சங்கங்களின் முதல் வருட விழா 15—3—41 சனிக்கிழமை மாலை 6-மணிக்கு விளையாட்டு மைதானத்தில் உள்ளூர் அட்வகேட் ஸ்ரீ. A. ராமச்சந்திரம் பிள்ளை பி. ஏ., பி. எல்., தலைமையின் கீழ் கொண்டாடப்பட்டது. பெற்றோர்களும் ஆசிரியர்களும் மற்றப் பிரமுகர்களும் ஏராளமாய்க் கூடியிருந்தனர். மாணவ மாணவிகளால் ஆங்கிலம், தமிழ், ஹிந்துஸ்தானி ஆகிய மூன்று பாஷைகளிலும் சம்பாஷணைகள், செய்யுள் ஒப்பித்தல், நடிப்புகள் முதலியன வெகுதிறமையாகச் செய்து காண்பிக்கப்பட்டன. குறித்த சில மாணவ மாணவிகளும் தங்கள் பாட்டுகளால் சபையோரை மிகுந்த சந்தோஷத்திற்குள்ளாக்கினர்கள். மாகாண ஹிந்துஸ்தான் சாரணர் சங்கத்தினரால் அளிக்கப்பட்ட சர்டிபிகேட்டை, ஸ்ரீ. வி. ஆர். சுப்பையா பிள்ளை பள்ளிக்கூட சாரணப் படைக்கு வழங்கினர். சென்ற வருஷத்தில் படிப்புத் திறமைக்கும் பள்ளிக்கூடம் ஒழுங்காக வந்ததற்கும் உள்ள பிள்ளைகளுக்குப் பரிசுகள் வழங்கப் பட்டபின் பள்ளிக்கூட ஹெட்மாஸ்டரும், சங்கங்களின் தலைவருமான ஸ்ரீ. எஸ். வி. மஹாதேவ சாஸ்திரிகள் அவர்களால் எல்லோருக்கும் வந்தனோபசாரம் சொல்லப்பட்டுக் கூட்டம் இனிது கலைந்தது.

## பர்மாவில் வாழ்பவர்கள்

### பர்மியர்களாகவே கருதப்படுவார்கள்

பர்மா சட்ட சபையில் ஒரு வெட்டுப் பிரேரணை சம்பந்தமாக நடந்த விவாதத்தின்போது பர்மா பிரதம மந்திரி யூ ஸா பர்மாவில் பிறந்து வாழ்ந்து உழைத்த எல்லோரையும் இதர உண்மை பர்மியர் போன்றே தாம் பாவிப்பதாயும், பர்மாவைத் தங்களது சொந்த தேசமாகச் செய்து கொண்டுள்ள ஆங்கிலோ—பர்மியர், பர்மிய முஸ்லிம், முஸ்லிமல்லாத இந்தியர்கள் மற்றுமுள்ள எல்லோரையும் தமது சர்க்கார் அந்நாட்டுப் பிரஜைகளாகவே நடத்துமென்றும் கூறினர். இதர சர்க்கார்கள் போன்று குடியேற்றத்திற்கான சட்டத்தை இயற்றத் தாம் மிக்க சிரத்தை கொண்டிருப்பதாயும், அதே சமயத்தில் தேசத்தில் வாழும் சகல ஜனங்களின் உரிமைகளையும் பாதுகாக்க வேண்டியது சர்க்கார் கடமை யென்றும், ஒரு தேசத்தில் பல சாதிகளிருந்தால் சிறுபான்மை சாதியினரின் பாத்தியதைகளை எந்த சர்க்காரும் புறக்கணிக்கக் கூடாதென்றும் கூறினர்.

### கட்டுப்பாடு எப்பொழுது?

பர்மாவில் பிறநாட்டினர் குடியேறுவதை எப்பொழுது கட்டுப்படுத்த சர்க்கார் உத்தேசித்துள்ளனர் என்று சட்ட சபையில் கேட்கப்பட்டபோது, இந்தியர் குடியேற்றம் சம்பந்தப்பட்ட மட்டில், டில்லியில் நடந்துவரும் வர்த்தகப் பேச்சுகள் முடிந்த பிறகும், இந்தியக் குடியேற்றக் கமிஷனின் சிபார்சுகளைப் பரிசீலனை செய்த பிறகுந்தான் பிரச்னை யோசிக்கப்படுமென்றும், மற்ற தேசத்தினர் குடியேறுவதைக் கட்டுப்படுத்தும் விஷயத்திலும் சர்க்கார் கவனம் செலுத்தி வருகின்றனரென்றும் வர்த்தக மந்திரி பதிலளித்தார்.

## எஸ். சோக்கனுதபுரம்.

### கால் பந்து போட்டி

20-3-41 வியாழக்கிழமை மாலை 5-30 மணிக்கு எஸ். சொக்கனுதபுரம் ஜவஹர் கால் பந்தாட்ட மைதானத்தில் ஷையூர் ஜவஹர் கால் பந்து கிளப் ஏழு பேர்கள் கொண்ட கோஷ்டிக்கும் குமாரவேலூர் கிராம விளையாட்டுக் கிளப் ஏழு பேர்கள் கொண்ட கோஷ்டிக்கும் ஒரு மேட்ச் நடந்தது. அதில் சொக்கனுதபுரம் கோஷ்டியார் 4 கோல் கொடுத்து வெற்றி பெற்றுர்கள். வெற்றி பெற்ற கோஷ்டியாரின் விளையாட்டு மிக அழகாகவும் சுறுசுறுப்பாகவுமிருந்தது. அதில் சந்தியாகு பிள்ளை 1 கோலும் மரியருள் பிள்ளை 1 கோலும் அற்புதம் பிள்ளை 2 கோலும் போட்டார்கள்.

### ஜில்லா போர்டு ஆண் பாடசாலை

19-3-41 மாலை 5-மணிக்கு ஷை பள்ளிக்கூட பெற்ருேர் சங்கக் கூட்டம் சங்கத் தலைவர் ஸ்ரீமான் கண. கரு. ஸ்ரீநிவாசன் செட்டியார் தலைமையில் கூடியது. மாணவர்களின் வியாசம் படிக்கப்பட்டு மாணவிகள் கோலாட்டத்துடன் தலைவர் முடிவுரை கூறக் கூட்டம் இனிது கலைந்தது.

### மாணவ மாணவிகள் சங்கம்

20-3-41 மாலை 5-மணிக்கு மாணவ மாணவிகள் சங்க மாதாந்தக் கூட்டம் ஷை பாடசாலைத் தலைமை ஆசிரியர் M. S. ஞானப்பிரகாசம் தலைமையில் நடைபெற்றது. கண. கரு. சுந்தரேசன் 'சுத்தம்' என்பதுபற்றியும், S. ஜானகி 'தேசப்பற்று' என்பதுபற்றியும் பேசினர். 28-3-41ல் ஷை சங்க ஆண்டு விழா நடத்தவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது.

## ஹிந்தி மாணுக்கர் கழகம், காரைக்குடி

மார்ச்சுமீ 23உ காலை 9-மணிக்கு சங்கத்தின் முதலாவது கூட்டம் டாக்டர் வி. எஸ். எஸ். மணி அவர்கள் தலைமையில் கூடியது. அச்சமயம் காரைக்குடி ஹைஸ்கூல் உபாத்தியாயர் T. S. ராஜகோபாலையர் அவர்களும், ஹிந்தி பண்டிதர் சேஷாத்திரியவர்களும் "தேச சேவை" என்னும் பொருள் பற்றிப் பேசினர்கள். சே. பாலசுந்தரம், எம். வி. பத்மனுபன், எல். முத்துக்கருப்பன், சாரங்கபாணி, சௌம்ய நாராயணன் முதலிய ஹிந்தி மாணுக்கர்களும் சொற்பொழி வாற்றினர்கள். ஹிந்தி பிரசாரகர் இ. தங்கப்பன் நன்றி கூற 10 மணிக்குக் கூட்டம் முடிந்தது.

## இந்து மத பாடசாலை, வாலாஜாபாத்

### தனி விழா

16-3-41 காலை 9 மணிக்கு திவான் பகதூர் தெய்வசிகாமணி முதலியார் அவர்களையும், விழாத் தலைவர் திவான் பகதூர் டி. எம். நாராயணசாமிப் பிள்ளை அவர்களையும் (சென்னை இந்து சமய அறநிலைய பாதுகாப்புக் கழகத் தலைவர்) உடன் வந்த பெரியார்களையும் இன்னிசையுடன் சாரணர்களும், குருளையர்களும் புடைசூழ மாணவர் இல்லத்து அமைச்சர்கள் ஊர்வலமாக அழைத்துச் சென்று மாணவர் இல்லத்து ஒவ்வொரு பகுதிகளையும் காட்டினர்கள். வீமன் விளையாட்டு வெற்றிப்படையினர் செய்துகாட்டிய ஆசனங்களும், பல்டிகளும், கோபுரங்களும், சிலம்ப வித்தைகளும் யாவருக்கும் இன்பந்தந்தன. பின்னர் மாணவர் இல்லத்தைச் சார்ந்துள்ள தொழிற்சாலை பார்வையிடப்பெற்றது. அங்கு 12 தொழில்களில் மாணவர்கள் பழகுகின்றதைக் கண்டார்கள். பின்னர் நடைபெற்ற பாராட்டுக் கூட்டத்தில் மாணவர் இல்லத்து அமைச்சர்களும், பழைய மாணவர்களில் சிலரும் திவான் பகதூர் முதலியார் அவர்களைப் பாராட்டிப் பேசினர். திவான் பகதூர் முதலியார் அவர்கள் விடையளிக்கையில் தாம் முன்னேற்றத்திற்கு வந்ததற்குக் காரணமாக நுண்ணிய கருமமும் எண்ணித் துணிதலையும், துணிந்தபின் மனவுறுதியோடு காரியத்தைச் செய்தமையும், பொய் சொல்லாமையும் என்று கூறினர்.

### தேவகோட்டை செட்டியார்கள் வருகை

தேவகோட்டை உ. ராம. மெ. சுப. சேவு. மெ. மெய்யப்ப செட்டியார் அவர்களும், உ. ராம. மெ. சு. மெ. சேவு. மாணிக்கவாசகஞ் செட்டியார் அவர்களும், கா. லெ. வீர. வீரப்ப செட்டியார் அவர்களும், அரு. சித. அரு. அருணசலம் செட்டியார் அவர்களும், சேவு. அருணசலம் செட்டியார் அவர்களும், கோட்டையூர் அழகப்பா அண்ணுமலை எம். டி. அவர்களும், கண்டனூர் பிச. லெ. வெங்கடாசலம் செட்டியார் அவர்களும் 19—3—41 ல் வாலாஜாபாத் இந்து மத பாடசாலையைப் பார்வையிட்டு பாடசாலையைப் பாராட்டிக் கருத்துரைப் வழங்கினர்கள்.

### திரு. சந்திரசேகரன் கைது

திருப்பத்தூர் சத்யாக்ரகக் கமிட்டித் தலைவர் திரு. சந்திரசேகரன் சென்ற செவ்வாய்க்கிழமை சத்யாக்ரகம் செய்து கைதியானர்.

### நகரப் பாதுகாப்புப் படை

பிப்ரவரி முதல் தேதிவரை இந்தியா முழுவதும் மொத்தம் 48,700 பேர்கட்கு மேல் நகரப் பாதுகாப்புப் படைக்குச் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். அதிகப்படியாகச் சேர்க்கப்பட்டிருக்கும் மாகாணங்கள்: பஞ்சாப், சென்னை, வங்காளம். சென்னை மாகாணத்தில் மட்டும் 10,000 பேர்கட்கு மேல் சேர்க்கப்பட்டிருக்கின்றனர். இங்கு சேர்க்க உத்தேசிக்கப்பட்டுள்ள தொகை 14,472.

### கொப்பனுபட்டி, கலைமகள் கல்லூரியின் பழைய மாணுக்கியர் கழகம்

10-3-41 காலை 10 மணிக்கு, செக்காலை திரு. மெ. ராம. மெ. மெய்யப்ப செட்டியாரவர்கள் தலைமையில் இக்கழகம் தொடங்கப் பெற்றது. பழைய மாணுக்கியர் பலரும் வந்திருந்தனர். தலைவரவர்கள் இக்கழகத்தின் அவசியத்தையும் பயனையும் விரிவுற எடுத்துக் கூறினர்கள். இக்கழகத்திற் தலைமை பூண்டு பணியாற்றுதற்கு கோட்டையூர் கலைச்செல்வி பெ. வள்ளியம்மையும், உடனிருந்து பணிபுரியுமாறு நேமத்தான்பட்டி கலைச்செல்வி அரு. காந்திமதியும், கொப்பனுபட்டி கலைச்செல்வி நி. அலர்மேல் மங்கையும் உரியரென அவையோர்களால் உறுதி செய்யப்பெற்றது. ஏனைக் கலைச்செல்வியர் உறுப்பினராக அமைக்கப்பெற்றனர். திரு. அ. மெ. மெய்யப்ப செட்டியாரவர்களும், ரெ. இராமமூர்த்தி ஐயரவர்களும், சொற்பெருக்காற்றினர். வந்தனங்கூறவும் வாழ்த்து நிகழ்த்தவும் இக்கழகம் 11-30 மணிக்கு இனிது நிறைவேறியது.



## நோட்டீஸ்

### தேவகோட்டை டி. மு. கோர்ட்டு

S. C. 650/40

I. A. 89/41

சுப்பா ரெட்டியார் —வாதி

அ. கரு. அரசு சேர்வை— பிரதிவாதி.

இந்த நிர். பிரதிவாதி ஆறுமுகம் உடையாருக்கு எழுதிக் கொடுத்திருக்கிற புரோநோட்டை இந்த நிர். வாதி சரியான பிரதிப் பிரயோஜனத்திற்கு மேடோபர் வாங்கி பிரதிவாதி பேரில் தொகையை வரப்பற்ற பிருது செய்து அதில் Substituted service க்கு ஆர்டருமீ 5-4-41உ வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஷை வாய்தாவில் உமக்கு ஏதாவது ஆக்ஷேபணை யிருந்தால் பகல் 10மணிக்கு ஆஜராகி ஆக்ஷேபணையை தெரிவித்துக் கொள்ளவும்.

T. சுந்தரராஜய்யங்கார்,

25-3-41. வக்கீல், தேவகோட்டை.

### போர்டுத் தலைவருக்கு ஆறு மாதம்

கர்நூல் ஜில்லா போர்டுத் தலைவர் ஸ்ரீ சுப்பராவ் மார்ச் 24உ சத்யாக்ரகம் செய்தார். அவர் கைது செய்யப்பட்டு, ஜாயின்ட் மாஜிஸ்திரேட்டால் 6 மாதக் கடுங்காவலும், 500 ரூ. அபராதமும் விதிக்கப்பட்டார்.

### ஸ்தல ஸ்தாபனக் காங்கிரஸ்காரர்கள்

ஏப்ரல் 10-ந்தேதிக்கு முன் ஸ்தல ஸ்தாபனங்களில் அங்கம் வகிக்கும் காங்கிரஸ்காரர்கள் அந்தப் பதவிகளிலிருந்து விலகிவிட வேண்டுமென்று பஞ்சாப் மாகாணக் காங்கிரஸ் கமிட்டி தீர்மானித்திருக்கின்றது.

## "பக்த கௌரி"

சிவன் வேறு, விஷ்ணு வேறு என்று வீண் சண்டையிடும் மக்களுக்கு அரியும் சிவனும் ஒன்றே என்பதை நிரூபிக்க சிவ பெருமான் மதுரையில் சைவ பிராமண வகுப்பிலுதித்த விருபாக்கன் கனவில் தோன்றி, அவனது மனைவி சுபவிரதையின் கர்ப்பத்தில் தன்னருளால் உதிக்கும் பெண் குழந்தைக்கு கௌரி என்று பெயரிட்டு, தக்க வயது வந்ததும், அங்கு வரும் ஒரு வரனுக்கு சாதி, மத பேதம் பாராமல் மணம் முடித்து வைக்கும்படி சொல்லி மறைகிருர். அவ்வண்ணமே குழந்தை பிறக்க அதற்கு 'கௌரி' யென்று நாம மிட்டு, தக்க பருவம் வந்ததும், தன் ஊருக்கு வந்த நரசிம்மன் எனும் வைஷ்ணவப் பையனுக்கு மணமுடித்து வைக்கிருர். நரசிம்மன் சமரச உணர்ச்சி உடையவன். அவன் தந்தை குப்பண்ணுவோ வீர வைஷ்ணவர். தன் வீட்டில் அம்பட்டன் புகுந்து விட்டதற்காக, காசியாத்திரை சென்றவர். அவர் திரும்பிவந்த சமயம் நரசிம்மனும் கௌரியும் வீடுபோய்ச் சேருகிருர்கள். கௌரி சைவப் பெண்ணென அறிந்து அவளை மாட்டுக் கொட்டத்தில் இருக்கச் செய்தது மன்றி, ஆண்டாள் (குப்புண்ணுவின் மனைவி) அவளைப் பலவிதத் துன்பங்களுக்கும் ஆளாக்குகிருள். ஆனுல், கௌரி சகல கஷ்டங்களையும் பொறுத்து, கடவுளே தஞ்சமென்ற உறுதியுடன் வாழ்ந்து வருகிருள். நரசிம்மன் அவளுக்கு எத்தகைய உதவியும் செய்ய சக்தியுள்ளவனுக இல்லை. சில சமயம் அவன் தாயைக் காணுது உதவி செய்ய முயன்ற போதெல்லாம், தடங்கல் ஏற்பட்டது மன்றி, கௌரியே தாய் சொல்லுக்கு மாருக நடக்க வேண்டாமென்றும் கேட்டுக் கொண்டாள்.

ஒரு நாள் ஆண்டாளின் சகோதரி வீட்டுக் கல்யாணத்துக்கு எல்லோரும் புறப்பட்டார்கள். ஆனுல் கௌரிமட்டும் தன்னந்தனியாக வீட்டில் விடப்பட்டாள். சமைப்பதற்கு எதுவும் கொடுக்கப்படவில்லை. நாலு நாள் பட்டினி. இந்த நிலைமையில் ஒரு கிழப் பரதேசி வந்து உணவு கேட்கிருர். அவரை வீட்டுக்குள்ளே அழைத்துச் சென்று, தன் நிலைமைக்கு வருந்துகிருள். பரதேசியின் சொல்படி கதவைத் தொட, பூட்டப்பட்டிருந்த கதவு திறக்கிறது. கௌரி உணவு தயாரித்துப் பரிமாறுகிருள். உண்டபின் பரதேசி திடீரென வாலிபராகிருர். கௌரியிடம் இன்னும் ஏதேதோ கேட்கிருர்; பேசுகிருர். அவளுக்கு ஒன்றும் புரியவில்லை. இது என்ன மாயம் என்று திகைக்கிருள். எவனே ஒருவன் கிழவேஷம் போட்டு வந்து தன்னை ஏமாற்றுவதாக எண்ணித் துடிக்கிருள். அச்சமயம் மாமி மாமனுர் முதலியோர் வர ஒன்றும் செய்யமாட்டாது கௌரி மயங்கிக் கீழே விழுகிருள். வாலிபரும் பச்சைக் குழந்தையாக அவள் பக்கத்தில் கிடக்கிருர். இந்தக் காட்சியைக் கண்டு எல்லோரும் கௌரியைப்பற்றி விபரீதமான அபிப்பிராயம் கொள்கிருர்கள். யாரும் அவள் வார்த்தையை நம்பவில்லை. அவள் குழந்தையுடன் வெளியேறுகிருள். எதிரே வந்த தந்தையும் அவள் நடத்தையில் சந்தேகங் கொள்கிருர். அதன் மேல் கௌரி கிணற்றில் விழுந்து உயிரை மாய்க்க முடிவு செய்து கிணற்றருகில் சென்று குழந்தையை வீசுகின்ருள். குழந்தை பரமசிவனுகமாறி அரியும் சிவனும் ஒன்றே என்ற உண்மையைப் போதித்து கௌரியை ஆட்கொண்டு மறைகின்றது. எல்லோரும் உண்மை தெளிகின்றனர். இது தான் கதை.

புராணக் கதையெனினும், மதபேதத்தில் அர்த்தமில்லை யென்பதையும், அதற்காக ஒருவருக் கொருவர் சண்டைபோட்டுக் கொள்ள வேண்டிய தில்லை யென்பதையும் விளக்குகின்றது. சாதாரணமாகப் புராணக் கதைகளிலுள்ள ஆபாசங்களையே நாம் சினிமாப் படங்களில் பார்க்கின்ருேம். ஆனுல் சேலம் மாடர்ன் தியேட்டர்லார் தயாரித்துள்ள இப்படம் அப்படியின்றி ஒரு சிறந்த போதனையை நன்கு விளக்குவதாக அமைந்திருப்பது போற்றத்தக்கது. எந்த மதமாயினும், எம்மதத்தினராயினும் வெறுப்புக் கொள்ள வேண்டியதில்லை; கலப்பு மணம் கடவுளுக்கும் சம்மதமானது தான் என்ற உண்மையையே இது விளக்குகிறது.

கதையின் அடிப்படையான நோக்கத்தை விரிவாகவும், தெளிவாகவும் புலப்படுத்தும் முறையில் இப்படத்தில் கதையமைப்பு தொகுக்கப்பட்டிருக்கின்றது. முக்கிய பாத்திரமான U. R. ஜீவரத்னம் (கௌரி) நன்கு நடிக்க முயன்று, பெரிதும் வெற்றி பெற்றிருக்கிருர். அவரது இனிய குரலும், இயற்கையாக நடிக்க வேண்டுமென்ற ஆசையும், எதிர்காலத்தில் நல்ல பெயரைக் கொடுக்கும் என்பதில் ஐயமில்லை. யஸ். டி. சுப்பையா (நரசிம்மன்) நன்கு பாடுகிருர். நடிப்புக்கு அதிக சந்தர்ப்பமில்லை. நரசிம்மனுக்கும் கௌரிக்கும் திருமணம் முடிவு செய்யு முன், இருவரையும் சந்திக்கச் செய்து, காதல் மணமாகக் காட்டியிருந்தால், ஒரு வேளை அவருக்கு நல்ல சந்தர்ப்பம் ஏற்பட்டிருக்கலாம். ஆனுல், கதைப்போக்கு அதற்கு இடமளிக்கவில்லை. காதல் மணமாயிருந்தால், தாயின் கட்டுப்பாட்டுக்கு அடங்கி, கையாலாகாத சோம்பேறி மாதிரி யிருக்க நேரிடாதல்லவா? வி. வி. வி. பந்துலு (பரமசிவன்), P. S. சிவபாக்கியம் (ஆண்டாள்), K. K. பெருமாள் (விருபாக்கன்) முதலியோரெல்லாம் தத்தம் பாத்திரங்கட்கு ஏற்றவாறு நன்கே நடித்திருக்கின்றனர். ஹாஸ்யப் பகுதியில், அம்பட்டனுக காளி என். ரத்தினம் நடிப்பது பொருத்தமாக அமைந்திருக்கிறது. அவர் புலி வேடம் போட்டு குப்பண்ணுவைப் பயமுறுத்தி கூவரக் கடனை வட்டியுடன் வாங்குவதையும் ரசிக்கலாம். திருவேங்கடத்தான் பேயாக வருவது, மந்திரவாதிகளின் மாய்மாலம், மனப் பேய் தவிர உண்மைப் பேயில்லை யென்ற உண்மைகளை விளக்குவதால் அதையும் பொறுத்துக்கொள்ளலாம். ஆனுல் இரண்டு பெண்டாட்டிக்காரன் அவஸ்தைப் படுவதைச் சேர்த்திருக்க வேண்டியதில்லை. அது இயற்கையுமல்ல, ஹாஸ்யமுமல்ல. பொதுவாக உயர்ந்த உண்மைகளைப் போதிக்கும் படங்களில் இம்மாதிரி விரசமான காட்சிகளே இல்லாதிருப்பது நலம். S. கொடானி டைரக்ஷன். "மதமெனும் பேதம் வீண் அபவாதம், சமத்துவ ஞானம் ஒன்றே ப்ரமாதம்". "மன்னுயிர் யாவும் பிறப்பினில் ஒன்றே, அன்பே சிவமென நினைப்பது நன்றே" முதலிய பல அரிய உண்மைகளை விளக்கும் இனிய பாடல்களை இயற்றியவர் S. வேல்சாமி. ஒலிப்பதிவும், படப் பிடிப்பும் சிறப்பாயிருக்கின்றன. மொத்தத்தில் படம் நன்ருகவே அமைந்திருக்கிறது.





## பத்திரிகைகள் சிக்கனம்

பிரிட்டிஷ் பத்திரிகைகள் சிக்கனத்தை அனுஷ்டிக்கும்படி உத்தரவிடப்பட்டிருக்கிறது. இதுவரை ஒரு பென்னி மதிப்புள்ள தினசரிப் பத்திரிகைகள் வாரத்தில் 6 தினங்களில் 6 பக்கங்களுடன் வெளிவந்தன. இனி 3 தினங்களில் 6 பக்கங்களுடனும், 3 தினங்கள் 4 பக்கங்களுடனும் வெளிவரும். 2 பென்னி, தினசரி வாரப்பத்திரிகைகள் 12 பக்கங்களிலிருந்து 10 பக்கங்களாகக் குறைந்து வெளிவரும். பத்திரிகைக் காகிதச் செலவைக் குறைப்பதே இதன் நோக்கம். ஏப்ரல் மாத மத்தியில் இன்னும் அளவு குறைக்கப்பட நேரிடுமாம்.

### பிரிட்டனுக்கு உதவ 700 கோடி டாலர்

பிரிட்டனுக்கு உதவும் பொருட்டு 700 கோடி டாலர் செலவு செய்வது பற்றிய மசோதா அமெரிக்கன் செனட் செலாவணிக் கமிட்டியில் மாறுதலின்றி அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது.

## விளம்பரம்

காரைக்குடி முனிசிபாலிட்டிக்கு பாத்தியமான பப்ளிக் வீதிகளிலும் அவைகளை அடுத்துள்ள, தாய்சுவரு இதர கட்டுக்கோப்புகளிலும், இன்னும் முனிசிபாலிட்டியாரால் விளம்பரம் செய்வதற்காக ஒதுக்கிவைக்கப்பட்டிருக்கும் இதர இடங்களிலும் பில்போஸ்டர்கள், இதர விளம்பர பத்திரிகைகள் வகையறுக்களிலும் வண்டி வாகனுதி வகையறுக்களிலும் இதர வகைகளில் விளம்பரங்களைப் பிரசித்தப்படுத்துவதற்கும் சென்னை ஜில்லா முனிசிபாலிட்டி ஆக்ட்படி குறிப்பிடப்பட்டுள்ள பீஸைச் செலுத்த அனுமதி பெறவேண்டியதாகும்.

ஷை பீஸுகளை 1-4-41வயிலிருந்து ஒரு வருடத்திற்கு காரைக்குடி முனிசிபாலிட்டியாரால் எனக்கு குத்தகை கொடுக்கப்பட்டிருக்கிறபடியால் மேல் கண்டபடி விளம்பரம் செய்ய விரும்புகிறவர்கள் ஏற்பட்ட பீஸை முன்னதாகவே என்னிடம் செலுத்தி அனுமதி பெறவேண்டும் என்பதை இதன் மூலம் தெரியப்படுத்துகிறேன்.

(Sd) நா. ராம. கிருஷ்ணசாமி.
C/o மனேஹரன் ஸ்டோர்ஸ்,
காரைக்குடி.



Edited, Printed and Published by S. MURUGAPPA for Dhana Vysian Company Ltd.,at the Kumaran Power Press, Karaikudi, (S. INDIA)

